# கொஞ்சிடும் கிளிமொழி, அஞ்சன மைவிழி
# குமரனின் கைவண்ணத்தால் எழில் மயமாகுதே



# Kalki Shopping Page

வாங்கிடுவீர்! இந்தியாவின்
சிறந்த பொருட்களை
வி ஜி பி யில்!

**SHOBA ஷோபா**
அரைவை இயந்திரம்



இந்தியாவில், குறைந்த மின்சார செலவில் அதிக அளவு அரைக்கும் அரைவை இயந்திரம். வேகமாக அரைப்பதுடன் மிகவும் நம்பகமானதும், ஒவ்வொரு இல்லத்திற்கும் மிகவும் அத்யாவசியமானதாகும். பலவித அளவுகளில் கிடைக்கிறது.

இலவச செய்முறை, விளக்கம் ஒவ்வொரு
வெள்ளிக்கிழமை மற்றும் சனிக்கிழமை
-களில் மாலை 5 முதல் 7-30 மணி வரை.
விஜிபிக்கு இன்றே வருகை தாருங்கள்!

**வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ.**
அண்ணா சாலை (812121)
சைதாப்பேட்டை (442333)
தி. நகர் (440246) ரட்டன் பஜார் (39649)

national 786

*sleek*
**Wall Fan**





**ALMONARD**
**- an unbeaten excellence**

Available with all leading dealers

# Beauty **with HAL* brains**

(* Hindustan Aeronautics Limited)

# Bharat TV



*Available at:*

| | | |
|---|---|---|
| **S. C. SHAH**<br>158, Mount Road,<br>Ph: 87531 | **LAKSHMI MUSICALS**<br>61, Usman Road,<br>Ph: 444629, 442290 | **SHAH & CO**<br>207, Mount Road,<br>Madras-6 Ph: 811959 |

AÇIL BA 33/79

# Kalki Shopping Page

# Kalki Shopping Page




ப. த. தங்கவேலு. பண்ருட்டி

- சமீபத்திய திரைப்பாடல்களில் தங்களைக் கவர்ந்தது எது?

ப: 'ஓரம்போ' என்று நான் சொல்லா விட்டால் என்னைப் பைத்தியம் என்று தமிழக இளைஞர் சமுதாயமே கூறும். ஆகவே, அவர்கள் பாராட்டைப் பெற நான் கூறப் போவது ஓரம்போ, காதல் வந்திரிச்சு பாடல்கள்.

ஆ. சீனிவாசன், திருச்செந்தூர்

- எழுத்தாளர் ஏகாம்பரத்தைப் பத்திரிகை உலகம் சரிவரப் பயன்படுத்திக் கொள்ளாததால் யாருக்கு நஷ்டம்?

ப. எழுத்தாளர் ஏகாம்பரத்துக்கு!



துரை பால்ராஜ். கோவை-12

- தங்களைப் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள்?

ப. என்னைப் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூறினால் உங்களுக்குத் திருப்தி ஏற்படலாம். எனக்கு ஏற்படாதே. என்னைப் பற்றிச் ''சில'' வார்த்தைகள் எழுத வேண்டுமானால் ஓர் இலவச இணைப்பே தேவைப்படும்.




ரேவதி வெங்கடேசன், சென்னை-43

- உங்கள் வெளிநாட்டு அனுபவத்தைப் பற்றிக் கூறுங்களேன்.

இந்தக் காலத்தில் எழுத்தாளர் யாராவது வெளி நாடு போகிறார்கள் என்றால் வாசகர்கள் பயப்படுகிறார்கள். இவன் போய் வந்துவிட்டு அறுக்கப் போகிறானே என்று நடுங்குகிறார்கள். ஆகவே உலக நாடுகள் பலவற்றைச் சுற்றி வந்திருக்கும் நான் எதையும் கூறப்போவதில்லை.

---

சக்தி நாயனார் மதுரை-11

- கமலஹாஸனுக்கு நடிக்கவே தெரியவில்லை என்கிறேன் நான். பத்திரிகைக்காரர்கள் எல்லாம் ஏன் தலை மேல் தூக்கி வைத்து விமர்சனம் செய்கிறார்கள்?

ப. ஒரு விஷயத்தில் உங்களைப் பாராட்டுகிறேன். உலகில் உள்ள எல்லாத் தமிழர்களின் ரசனையைத் தன்னந் தனி ஆளாக நின்று சாடுகிறீரே! லட்சோப லட்சம் சினிமா ரசிகர்களுக்கும் பத்திரிகை நிருபர்களுக்கும் தனித் தனியே 'சம்திங்' கொடுத்திருப்பாரோ கமலஹாஸன்?

மைதிலி கண்ணன்,
ஹைதராபாத்

- சிலர் அலுவலகத்தில் வேலையைத் துவங்கு முன் 'ஸ்ரீராமஜெயம்' பத்து இருபது தடவை எழுதுகிறார்களே, அதைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

ப. 'ஸ்ரீராமஜெயம்' எழுதுவதைப் பற்றி என்ன கருத்தை எதிர்பார்க்கிறீர்கள்? ஸ்ரீராமஜெயம் எழுதுவது போல் தினமும் ஒரு குறளை எழுதலாம். கீதையிலிருந்து கம்பராமாயணத்திலிருந்து சில வரிகளை எழுதலாம். நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலிருந்து இப்படி எழுத ஆரம்பித்தேன். சுமார் இரண்டு வருடங்களில் எழுதி முடித்து விட்டேன்.

பரிசு பெறுபவர்:

**ரேவதி வெங்கடேசன்,**
**18,புதுத் தெரு, பல்லாவரம்,**
**சென்னை-43.**

# சினிமா மசாலா

## 'சலன்'

இந்தியில் 'சேரி பீ சேரி' என்று ஒரு படம் தயாராகி வருகிறது. இப்படத்தின் கதாநாயகன் சஞ்சீவ் குமார். கதையின்படி கதாநாயகன் பாதி மனிதன். பௌர்ணமி இரவில் பயங்கர உருவத்தை அடைந்து மனித மிருகமாக மாறி விடுகிறான். இந்தக் கதைக்கு சஞ்சீவ் குமாருக்காக மேக்கப் போட்டு விட்டவர் இந்தியாவின் சிறந்த மேக்கப் கலைஞர் சரோஷ் மோடி. ''மேக்கப்பைப் பொறுத்தவரை இப்படம் ஒரு சரித்திரத்தைப் படைக்கும் என்பதில் ஐயமில்லை'' என்கிறார் சரோஷ்.

• • •

''தமிழ் நாடு எதற்கும் சோடை போகாது. நாம் அந்தக் காலத்திலேயே எல்லாம் செய்து விட்டோம்'' என்று கூறுகிறார் நடிகரும் தமக்குத் தாமே மேக்கப் போட்டுக் கொள்ளும் கலைஞருமான எஸ். டி. ஆர். சந்திரன். ''இன்று சஞ்சீவ் குமார் போட்டுக் கொண்டார்; சாதனை என்று புகழ்கின்றன பத்திரிகைகள். ஆனால் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்பே நான் போட்டுக் கொண்டு எடுத்தவை இந்தப் போட்டோக்கள்'' என்று கூறிப் படங்களைக் காட்டுகிறார் சந்திரன்.

• • •

''பல படங்கள் தோல்வியைக் கண்டாலும் இன்னும் நிமிர்ந்து நிற்பவள் நானாகத்தான் இருக்க முடியும். எனது படங்கள் தான் அதிகம் தோல்வியைத் தழுவின. ஆனால் எனக்கு இப்பொழுது அதிகம் படங்கள் இருக்கின்றனவே. கிட்டத்தட்ட பதினைந்து படங்களில் நான் தற்சமயம் நடித்துக் கொண்டு வருகிறேன். நேரம் வரும்; அப்பொழுது தெரியும், நான் சாய்ந்துவிடவில்லை என்று'' எனக் கூறுகிறார் ஜீனத் அம்மான்.

• • •

பாடகர் கிஷோர் குமார் தற்சமயம் நடிகை வீணா சந்தாவார்கரைத் திருமணம் செய்து கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறார். வீணாவின் கணவர் சுட்டுக் கொல்லப்பட்டது எல்லோருக்கும் தெரியும். இப்பொழுது வீணாவும் கிஷோர் குமாரும் நெருங்கிப் பழகி வருகிறார்கள். கிஷோர் குமார் மூன்று முறை திருமணம் ஆனவர். இவரது கடைசி மனைவி யோகிதா பாலியை இவர் விவாகரத்துச் செய்ய முடிவுசெய்து விட்டார். வீணா நேற்று கிஷோரின் விசிறி; இன்று காதலி; நாளை மனைவி.



வீணா சந்தாவார்கர்

• • •

ராஜ் நாராயண் தேர்தலில் எங்கே நின்றாலும் அவரை எதிர்த்து நான் நிற்கப் போகிறேன். இது நிச்சயம். என்னை ஆதரித்து இந்தியப் பட உலகின் நகைச் சுவை நடிகர் நடிகையர் பிரசாரம் செய்வார்கள். ''ஜோக்கர்'' தொகுதி என்றே அந்தத் தொகுதியை அழைக்கலாம் என்று கூறுகிறார் ஐ. எஸ். ஜோகர்.

பிலிம் மிரர் பத்திரிகையின் ஆசிரியரான 'ஹர்பஜன் சிங்'கும் இந்த இடைத் தேர்தலில் போட்டி போடுகிறார். முன்னாள் தகவல் ஒலிபரப்பு மந்திரி வி. சி. சுக்லாவை எதிர்த்துப் போட்டு போடுகிறார். ஹர்பஜனை ஆ· ந்த்து ஹேமமாலினி, சபனு ஆஸ்மி, பே· டி

சஞ்சீவ் குமார் மேக்கப்புடன்

டி. ஆர். சந்திரன்

டி. ஆர். சந்திரன் - மேக்கப்புடன்



மீர்சா, வித்யா சின்ஹா ஆகியோர் பிரசாரம் செய்வார்கள். ஜனதா டிக்கெட்டில் இவர் நிற்கிறார்.

• • •

ரஜினிகாந்த் தற்சமயம் அதிகம் பழகுவது யாருடன் தெரியுமா? குட்டி யானையுடன் தான். தேவர் பிலிம்ஸ் தயாரித்து வெளியிட்ட படம் 'மா' இந்தியில் வெளியான இதை இப்பொழுது தமிழிலும் தெலுங்கிலும் எடுத்து வருகிறார்கள். ரஜினிகாந்த் தான் இரு மொழியிலும் கதாநாயகன். தமிழ் படத்தின் பெயர் 'அன்னை ஓர் ஆலயம்' ''சிங்கம், சிறுத்தைப் புலி ஆகியவைகளுடன் சண்டை போட்டேன். சிறுத்தையுடன் போடும் சண்டைதான் கஷ்டம். காரணம் அது மிகவும் குயுக்தியானது. ஆனால் எல்லாவற்றையும் ஆண்டவன் கருணையில் வெற்றிகரமாகச் செய்து விட்டேன்'' என்று கூறுகிறார் ரஜனி. அவரைப் பற்றி வந்த செய்திகளுக்கும் அவரை இன்று நேரில் பார்த்துப் பேசுவதற்கும் நிறைய வித்தியாசம் உள்ளது. உடல், மனநிலை நன்றாகவே தேறியுள்ளார் ரஜனி.

• • •

ஏ. வி. எம். ராஜேசுவரி தியேட்டர் அக்டோபர் ஒன்றிலிருந்து பொதுமக்களுக்குத் திறக்கப்பட இருக்கிறது. இதில் திரையிடப்பட்ட முதல் படம் எது தெரியுமா? ''ஸ்ரீவள்ளி''. ''புதிதாகத் திறக்கப்படும் தியேட்டர்கள் பலவும் முதன் முதலில் போடும் திரைப்படம் ஸ்ரீவள்ளிதான். ஏவி. எம். தயாரித்து டி. ஆர். மகாலிங்கம் நடித்த படம். ஸ்ரீ முருகப் பெருமானைக் குறித்த பக்திப் படம் ஆதலால் பூஜை போட்டாற் போலாகிறது. இறையருள் கூடும் என்ற நம்பிக்கை. எல்லாப் புதிய தியேட்டர்களும் எங்களிடம் இந்த ஸ்ரீவள்ளி படத்தை வாங்கி முதலில் திரையிட்டுப் பார்ப்பார்கள். இந்தப் படம் கிட்டத்தட்ட 100க்கு மேற்பட்ட புதுத் தியேட்டர்களைக் கண்டது'' என்றார் ஏவி. எம். சரவணன். புதிய ஏ. வி. எம். ராஜேசுவரி ஏ. ஸி. தியேட்டர் 603 இருக்கைகள் கொண்டது. எல்லா வகுப்பு டிக்கட்டுகளுக்கும் முன்பே 'அட்வான்ஸ் புக்கிங்' செய்துவிடலாம். தமிழ் நாட்டிலேயே எல்லா வகுப்பு டிக்கட்டுகளுக்கும் அட்வான்ஸ் ரிசர்வேஷன் வசதி இங்கு மட்டும்தான் உண்டு.

⌘ அன்னை ஓர் ஆலயம் படத்தில் ஸ்ரீப்ரியா, ரஜினி காந்த்.



⌘ ஏ. வி. எம் சரவணன்




கலப்பை மாடுகளுடன் உழும் விவசாயி சின்னம் ஜனதா (எஸ்) கட்சிக்கு வழங்கப்பட்டிருக்கிறது! புதிய லோகதளக் கட்சி அதே சின்னத்தைப் பெற முயலும்.












# கல்கி

1979 அக்டோபர் 7
சித்தார்த்தி புரட்டாசி 21
மலர்: 38 இதழ்: 10




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# தமிழா! பெருமைப்படு!

தமிழா பெருமைப்படு! தலைநிமிர்ந்து நில்! ராஜநடை போடு!

இதோ, ஒரு கூட்டணி உருவாகியுள்ளது. இது, 'தேர்தல் முடிவு எவ்வாறு இருக்குமோ? இந்தத் தேசத்தின் எதிர்காலம் என்ன வாகுமோ' என்ற கவலையை விரட்டி அடித்து நெஞ்சுறுதி கொள்ளச் செய்திருக்கிறது. ஜனதாவும் அ. இ. அ. தி. மு. க.வும் தேர்தல் உடன்பாடு கண்டிருக்கின்றன.

'என்னடா இது நமது புரட்சித் தலைவர் சர்வாதிகார சக்திக்கு ஆதரவு கொடுத்து வருகிறாரே' என்ற வருத்தம் நமக்கு இருந்து வந்தது.

'அடடா! சதி செய்து ஆட்சியைக் கவிழ்த்த வஞ்சகர்களின் தாற்காலிக மந்திரி சபைக்கு இரு அமைச்சர்களை நமது முதல்வர் தானம் பண்ணி யிருக்கிறாரே' என்ற வேதனை நமது இதயத்தை முறுக்கிப் பிழிந்து வந்தது. இப்போது அந்த விசனம் நீங்கியதோடு புதிய கூட்டணி பற்றி விம்மிதமடைந்திருக்கிறோம்.

இந்த நல்ல சூழ்நிலை உருவாகக் கருணாநிதியும் பட்நாயக்கும் பெருந் துணையாய் இருந்தார்கள். அவர்களுக்கு நன்றி கூறிக்கொள்கிறோம். இனம் இனத்தோடு சேரும் என்பது போல் சர்க்காரியா கமிஷன் தீர்ப்புப்பெற்றவரும் ஷா கமிஷன் தீர்ப்புப் பெற்றவரும் ஒன்று சேரப் போக, அது புரட்சித் தலைவருக்கு ஜனதாவுடன் கரம் கோத்து நடக்க ராஜபாட்டை வகுத்துத் தந்தது. வடக்கு, தெற்கு துருவங்களை இணைக்கப் பார்த்து பட்நாயக் தமது ராஜ தந்திரமின்மையை நிரூபித்துக் கொள்ள, அதுவும் புதிய கூட்டணி உருவாக உதவியது.

'எம். ஜி. ஆர். மறுபடியும் மனம் மாறமாட்டாரா?' என்று சிலர் வினவலாம். இதுவரை இருந்து வந்தவை பொருந்தாச் சேர்க்கைகள். வாய்மை யையும் ஜனநாயகத்தையும் கட்சிக்குள் நிலைநிறுத்தப் பார்த்தபோதுதான் தி. மு. க.வை விட்டு வெளியேற்றப்பட்டார் எம். ஜி. ஆர். அவரே சந்தர்ப்ப வாதிகளுக்கும் சர்வாதிகாரிகளுக்கும் சில காலம் துணை நிற்க நேர்ந்தது துர திர்ஷ்டம். ஆனால் இன்று உருவாகியுள்ள புதிய கூட்டணி இயல்பானது, தர்ம நியாயமானது, நற்பயன் விளைவிக்கக் கூடியது. எனவே, இது நீடிக்கும், நிலைக்கும், நாடாளும் என்று எதிர்பார்த்துப் பிரார்த்திப்போம், பாடுபடுவோம்.

இரு கட்சிகளுக்குமிடையில் கொள்கை வேற்றுமைகள் இருக்கலாம். ஆனால் லஞ்ச ஊழலற்ற நல்லாட்சி, ஜனநாயகப் பற்று, தன்னலமற்ற தேசபக்தி, அனைத்து மக்களுக்கும் வேலை வாய்ப்புத் திட்டம் போன்ற சில அடிப்படை ஒற்றுமைகள் இருக்கவே செய்கின்றன. இவை இந்தக் கூட்டணியை நியாயப் படுத்தப் போதுமானவை. எதிர் அணிகளிடம் இல்லாதவை.

தமிழக ஜனதாக் கட்சி இந்த அருமையான நல்வாய்ப்பைத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளட்டும். பழங் கதைகளை மறந்து புதிய கூட்டணியின் வெற்றிக்கு முழு மனத்துடன் பாடுபடும்போதே தனது செல்வாக்கையும் வளர்த் துக்கொண்டு மேம்படட்டும். தேவையான அளவில் விட்டுக் கொடுத்து ஒத்துழைத் தால் ஜனதா தமிழகத்துக்கு அப்பாலும் புதிய பலம் பெறும்.

சந்தர்ப்பவாதிகளும் சதிகாரர்களும் விலகிவிட எஞ்சியுள்ள ஜனதாவில் ஜனசங்கத் தலைவர்களும் ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்களும் உள்ளனர். பகு குணாவும் அவரது ஜனநாயக காங்கிரஸ் தோழர்களும் சரண் சிங்கின் புதிய லோகதளக் கட்சியில் சேராமல் ஒதுங்கி யிருப்பது மற்றொரு சுபசூசகம். அவர்கள் திரும்பவும் பாபு ஜகஜீவன்ராமின் அன்பான அரவணைப்புக்குள் வரலாம்.

குறைகளே இல்லாத தலைவர்கள் உலகில் எங்குமே இல்லை. ஜனதாவிலும் இல்லை. ஆயினும் அவர்கள் சுயநலமிகளோ, சதிகாரர்களோ, சந்தர்ப்பவாதி களோ, சர்வாதிகாரிகளோ அல்ல என்பதே இன்றைய நோக்கில் திருப்தி அளிக் கும் மிகப் பெரிய விஷயம். அவர்களுடன் புரட்சித் தலைவர் கூட்டணி அமைத்தி ருப்பது குறித்து நல்லோர் அனைவரும் பூரிப்பெய்துவர்.

எதிர்காலம் இருள் மயமாகத் தோன்றியது. நல்ல அறிவொளியால் இருள் அகற்ற வந்திருக்கிறார் எம். ஜி. ஆர். தமிழா! இனி எதிர்காலம் பற்றி அதைரியப்படாதே! நம்பிக்கை கொள்!




இக்காலத்துக் கணவர்களைப் போல் அல்லாமல் என்னுடைய கணவர் நான் மாதம் ஆயிரம் ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருந்தும், கல்யாணத்துக்குப் பிறகு வேலையை விட்டுவிட வேண்டும் என்று என்னைப் பெண் பார்க்க வந்த அன்றே நிபந்தனை விதித்தார். இந்தக் காலத்தில் இப்படி ஓர் அதிசயப் பிறவியா என்று நாங்கள் எல்லோரும் மூக்கில் விரல் வைத்தோம்.

தமக்கு வேலைக்குப் போகும் மனைவி ஏன் வேண்டாம் என்பதற்கான காரணத்தை அவர் வர்ணித்த விதம் வேடிக்கையாக இருந்தது.

''நான் ஆபீஸிலிருந்து வரும்போதே என்னை டிபன் தட்டும் கையுமாக வரவேற்க வேண்டும். உள்ளே நுழைந்த உடன் 'காப்பி' என்று குரல் கொடுப்பேன். டாண் என்று ஆவி பறக்கும் காப்பி என் முன்னால் வரவேண்டும். வேலைக்குப் போகும் மனைவியால் இப்படியெல்லாம் நடந்து கொள்ள முடியுமா?'' என்று கேட்டு, தாம் ஒரு சரியான சாப்பாட்டு ராமன் என்பதைத் தெரிவித்துக் கொண்டார்.

கல்யாணத்துக்குப் பிறகு கணவனைக் கைக்குள் போட்டுக்கொண்டு அவர் மனத்தை மாற்றிவிடலாம் என்ற நம்பிக்கையில் இவருக்குக் கழுத்தை நீட்டச் சம்மதித்தேன்.

திருமணம் முடிந்து முதலிரவு. காதல் வசனம் பேசப் போகிறேன் என்று காதைத் தீட்டிக் கொண்டிருந்த என் கணவரிடம், அன்றைய 'மூடி'ல் என்ன வரம் கேட்டாலும் கிடைக்கும் என்ற தைரியத்தில், என்னுடைய கோரிக்கையை வெளியிட்டேன்.

ஒரு வருடத்தில் அதாவது, ஒரு குழந்தை பிறக்கும்வரை வேலையைத் தொடர்வதற்கான சம்மதத்தைக் கெஞ்சிப் பெற்று விட்டேன். ஆனால் கூடவே தனக்குக் காப்பி, டிபன், சாப்பாடு எல்லாம் வேளா வேளைக்குக் கிடைக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார். எல்லாவற்றுக்கும் தலையசைத்தேன்.

தனிக் குடித்தனம் ஆரம்பமாயிற்று. லீவு முடிந்து இருவரும் ஆபீசுக்குப் போக ஆரம்பித்தோம். முதல் நாள் மாலையே தொடங்கியது தகராறு. வீட்டுக்குள் நுழைந்த உடன், 'காப்பி' என்று குரல் கொடுத்தார் என் கணவர். நானோ சமையல் அறையில் தவித்துக் கொண்டிருந்தேன். காலையில் வாங்கிய பால் திரிந்து போய் விட்டது. குரல் கொடுத்து ஐந்து நிமிஷங்களாகியும் காப்பி வராததால், நேராகச் சமையல் அறைக்கே வந்து விட்டார். விஷயத்தைப் புரிந்து கொண்டு, 'உர்' என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு ஃப்ளாஸ்கை எடுத்துக் கொண்டு பக்கத்து ஹோட்டலுக்குப் போனார்.

மறு நாள் காலை முன்னெச்சரிக்கையாகப் பாலை இரண்டு முறை காய்ச்சி வைத்தும், நாங்கள் மாலை ஆறு மணிக்கு வருவதற்குள் பால் திரிந்து விட்டது. இன்று அவர் 'காப்பி' என்று கூவியவுடன் நானே ஃப்ளாஸ்கை அவர் கையில் கொடுத்தேன். வந்த ஆத்திரத்தில் அதை வீசி விட்டெறியப் பார்த்தார்.

அன்று இரவு மறுபடியும் ஒரே கெஞ்சல், அதாவது கொஞ்சல்.

''ப்ரிஜ் ஒன்று வாங்கினால் ரொம்பச் சௌகரியமாயிருக்கும். சாயங்காலம் நாம் ஆபீசிலிருந்து வரதுக்குள்ளே பால் டிப்போ மூடிவிடுகிறான். அதனால் காலையில் பால் வாங்கி பிரிஜ்ல் வைத்துவிடலாம்.''

''இப்பொழுது நாலாயிரம் ரூபாய்க்கு எங்கே போகிறது?''

''அதைப் பற்றி நீங்க கவலைப்பட வேண்டாம். நான் ஏற்கெனவே எல்லாம் விசாரித்து வைத்திருக்கிறேன். தவணை முறையில் கிடைக்கிறது'' என்று உற்சாகமாகப் பதில் சொன்னேன்.

எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் ஐந்தாம் மாதம் காலையில் வாந்தி எடுக்க ஆரம்பித்தேன். சாதாரணமாக எல்லாப் பெண்களையும் மகிழ்ச்சிக்குள்ளாக்கும் இச்செய்தி எனக்கு வருத்தத்தையே கொடுத்தது. நான் வேலையை விட வேண்டிய நாள் நெருங்குகிறது என்பதனால். என் கணவருக்கோ இரட்டிப்பு மகிழ்ச்சி. கூடிய விரைவில் தந்தையாகப் போகிறோம் என்பதைவிடப் பழைய பாலில் காப்பி சாப்பிட வேண்டாம் என்பதும், மனைவிக்கு ஒத்தாசையாகப் பாத்திரங்கள் துலக்க வேண்டாம் என்பதுமே அவருக்கு அதிக மகிழ்ச்சியை அளித்திருக்கக் கூடும் என்று நான் சொல்லத் தேவையில்லை.

பிரசவம் முடிந்து குழந்தையும் கையுமாக வந்து சேர்ந்த என்னை வரவேற்கப் பேப்பரும், பேனாவுமாக நின்றார் என் கணவர். உடனேயே ராஜிநாமாக் கடிதம் எழுதிக் கொடுக்கும்படி அவசரப்படுத்திய என் கணவரிடம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, 'நாள்

வேலையை விடப்போவதில்லை' என்ற விஷயத்தைச் சொன்னேன். அவர் இந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடுவதற்கு முன்பு, என்னுடைய வழக்கமான கெஞ்சலை, கொஞ்சலை ஆரம்பித்தேன்.

''விஷயத்தைக் கேளுங்கோ. உங்கள் தம்பி இருக்கிறாரே, உங்களை விடச் சின்னவர்! அதற்குள் மெட்ராஸில் வீடு வாங்கிட்டார். நாம் மட்டும் இன்னும் வாடகை வீட்டில்தான் இருக்கிறோம். நானும் வேலை பார்த்தால், என் சம்பளத்தை அப்படியே பாங்கில் போட்டு விடலாம். எப்படி என் யோசனை'' என்று மெதுவாக அவருக்கு ஆசை மூட்டினேன்.

டில்லியில் சொந்த வீடு என்றால் கசக்கிறதா? இப்பொழுது மாதம் 500 ரூபாய் வாடகை கொடுக்கிறோம்; இரண்டே பர்சாத்திக்கு.

நான் வேலைக்குப் போகும் போது வீட்டில் குழந்தையைக் கவனித்துக் கொள்வதற்கென்று என் மாமியாரை ஊரிலிருந்து வரவழைக்கலாம் என்று முடிவு செய்தோம். நயமாக அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்காக இங்கு வரவேண்டும் என்று எழுதுவதற்கு எனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

ஒரு வழியாக மாமியாரை ஊரிலிருந்து வரவழைத்தாகி விட்டது. புதிய பிரச்னைகள் முளைத்தன. இந்தக் காலத்து மாமியார்கள் அத்தனை சுலபத்தில் ஏமாந்து விடுவார்களா, என்ன? குழந்தையைக் கவனித்துக்கொள்ளும் காரணத்தால் சமையல் அறைப் பக்கம் தலை வைத்துக்கூடப் படுக்காமல், வேறு வீட்டு வேலை ஒன்றும் செய்யாமல், சாமர்த்தியமாக டபாய்த்தார்.

என் மாமியார் டில்லிக்கு வந்து நான்கு மாதங்கள் கூட ஆகியிருக்காது. ஊரிலிருந்து அவர் பேத்திக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருப்பதாகக் கடிதம் வந்தது. இந்த நிமிடமே ஊருக்குப் புறப்பட வேண்டும் என்று ஒரேயடியாகப் பிடிவாதம் பிடித்து எங்களை 'அம்போ' என்று நிர்க்கதியாக விட்டுவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார் என் மாமியார். அவர் திரும்பி வரும்வரையில் நான் ஆபீஸில் லீவு எடுத்துக் கொள்வது என்று முடிவு செய்தோம்.

திருமணம் முடிந்து ஒரு மாதம் ஆகியும் என் மாமியார் திரும்பி வரும் வழியாக இல்லை. ஆடி மாதம் முடிந்து பேத்தியைக் குடித்தனம் வைத்த பிறகு வருகிறேன் என்று எழுதினவர் இனிமேல் பேத்தியின் வளைகாப்பு, சீமந்தம் அதற்குப் பிறகு பிரசவம், அப்புறம் கொள்ளுப் பேரனின் (அல்லது பேத்தியின்) தொட்டில், பிறந்த நாள் எல்லாம் முடிந்துதான் வருவார் என்று தோன்றியது. அதனால் ஊரிலிருந்து யாராவது சமையற்கார அம்மாளை வரவழைக்கலாம் என்று முடிவெடுத்தேன். என் கணவரோ என் வேலையை விட்டுவிடும்படி நச்சரிக்க ஆரம்பித்தார். சமையற்கார அம்மாள் தேடும் படலம் ஆரம்பமாயிற்று. ஒரு வழியாகக்





## அட்டைப்பட விளக்கம்



5000 ரன்கள் எடுத்து உலகப் புகழ் பெற்ஜேர் வரிசையில் சேர்ந்த காவஸ்கருக்கு நமது வாழ்த்துக்கள்.

புகைப்படம் : பாலாஜி

கிடைத்தார் ஓர் அம்மாள் தூத்துக்குடியில். உடனே அவரை அனுப்பி வைக்கும்படி தந்தி மணியார்டர் பண்ணினேன்.

வந்து சேர்ந்தார் அந்த அம்மாள்! குழந்தையை அவரிடம் விட்டு விட்டு நிம்மதியாக அலுவலகம் போனேன். மாலையில் நான் வீட்டுக்கு வந்ததும் வராததுமாக அவர் ஆரம்பித்தார்:

''என்னால் சாயங்காலம் ரேடியோ ஸிலோனில் தமிழ் சினிமாப் பாட்டுக் கேட்காமல் இருக்கவே முடியாது. உங்கள் வீட்டு புரான்ஸிஸ்டரில் ஸிலோனே கேட்கலையே?'' என்று பெரிய குற்றச்சாட்டு.

தமிழ் சினிமாப் பாடல்கள் கேட்க முடியவில்லையே என்பதற்காக ஊருக்குப் புறப்பட்டு விடப் போகிறளே என்று பயந்த நான் அடுத்த மாதம் சம்பளம் வாங்கியதும் முதல் வேலையாக ஒரு நான்கு பாண்ட் டிரான்ஸிஸ்டர் வாங்கினேன். அந்த மாதச் சம்பளம் முழுவதும் செலவழிந்து விட்டது.

இரண்டு மாதங்களில் தில்லியில் நன்றாகக் குளிர ஆரம்பித்து விட்டது.

''இந்த ஊர்ல இப்படிக் குளிர் நடுக்கும் என்று முன்கூட்டியே ஏன் என்னிடம் சொல்லவில்லை? இந்த நிமிடமே ஊருக்குப் புறப்படுகிறேன்'' என்று ஒரே ரகளை பண்ணி விட்டார் அந்த அம்மா. அவரைச் சமாதானம் செய்து, ரஜாய், ஸ்வெட்டர், சால்வை, காலுக்கு ஸாக்ஸ் எல்லாம் வாங்கிக் கொடுத்தேன். முந்நூறு ரூபாய் செலவழிந்தது.

நிம்மதியாக ஒரு வாரம் கழிந்தது. திடீரென்று தூத்துக்குடியிலிருந்து சமையற்கார அம்மாளின் கணவர் இறந்து போய் விட்டதாகத் தந்தி வந்தது. உடனே மூட்டையும் முடிச்சுமாகப் புறப்பட்டு விட்டார் அந்த அம்மாள்.

''கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்'' என்று ஏதோ பழமொழியெல்லாம் சொல்லிக் கொண்டு மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தார். இரக்க சுபாவமுள்ள என் கணவர் ஒரேயடியாக உருகிப் போய் மதுரை வரை விமான டிக்கட் வாங்கிக் கொடுத்து விட்டார். ஆயிரம் ரூபாய் செலவு.

போன அம்மாள் திரும்பி வருவாள் என்ற நம்பிக்கையில் ஒரு மாதம் காத்திருந்தும், அவர் வராததால் என் கணவர் என்னை வேலையை விட்டுவிடும்படி தொண தொணக்க ஆரம்பித்தார். ஆனால் நானோ அவ்வளவு எளிதில் என் தோல்வியை ஒப்புக்கொள்வதாக இல்லை.

---

'தர்மசங்கடம்'



# எட்டு சிறுகதைகள்

தமிழ் வாரக் கல்கி

## வானவில் சிறப்பிதழ்

ஊதா: சு. சமுத்திரம்
கருநீலம்: துமிலன்
நீலம்: ராஜம் கிருஷ்ணன்
பச்சை: கௌசிகன்
மஞ்சள்: பாலகுமாரன்
ஆரஞ்சு: அநுராதா ரமணன்
சிவப்பு: லக்ஷ்மி ராஜரத்தினம்
வெண்மை: சூடாமணி

எனக்குப் புதிய யோசனை ஒன்று தோன்றியது. என்னுடைய ஆபீசிலிருந்து ஒரு பர்லாங் தொலைவில் இருக்கும் கிரெஷில் குழந்தையை விடுவது என்று தீர்மானம் செய்தேன். மாலையில், முனியம்மா வராத நாட்களில் பாத்திரங்கள் துலக்குவதுடன், என் கணவருக்கு, காலையில் குழந்தையைக் குளிப்பாட்டி, உடை மாற்றிக் கிளம்பத் தயாராக வேண்டிய ஏற்பாடுகளும் பண்ண வேண்டியதாயிற்று.

நானே சமையல் வேலையை முடித்துவிட்டுக் குழந்தைக்கு வேண்டிய சாமான்களை ஒரு பையில் எடுத்துக் கொண்டு கூட்டை முடிச்சுடன், தலையை ஒழுங்காகப் பின்னிக் கொள்ளக் கூட நேரம் இல்லாததால், வயதான அம்மா போல் முடிந்து கொண்டு ஆபீசுக்குப் புறப்பட்டேன். காலை ஒன்பது மணிக்குள் அலுவலகத்தை அடையாவிட்டால் அரை நாள் லீவு போய்விடும். அதனால் குழந்தையை ஏதோ உயிரில்லாத ஒரு வஸ்து மாதிரி அழ அழப் போட்டுவிட்டு திரும்பிக் கூடப் பார்க்காமல் ஓட்டமும் நடையுமாக நெற்றிச் சாந்து வழிய வியர்க்க விறுவிறுக்க அலுவலகத்தை அடைவதற்குள் போதும்என்று ஆகி விடும்.

இந்த வாழ்க்கை எனக்கே அலுத்து விட்டது. ஏதோ மாதம் 500 ரூபாய் பாங்கியில் போடுகிறோம் என்பதற்காக இவ்வளவு கஷ்டப்பட வேண்டுமா? நன்கு யோசித்து ஒரு உறுதியான முடிவெடுத்தேன். நான் வேலையை விடப் போகிறேன்!

மறுநாள் ராஜிநாமாக் கடிதத்தை வீட்டிலிருந்தே எழுதிக் கொண்டு ஆபீசுக்குப் போனேன். நான் ஆபீசுக்குள் நுழையும் போதே ஸ்வீட்டும், காப்பியுமாகத் தடபுடலாகப் பார்ட்டி நடந்து கொண்டிருந்தது. உற்சாகமாக ஸ்வீட் தட்டை என்னிடம் நீட்டிய சக ஊழியர், இந்த மாதத்திலிருந்து எங்களுக்கு மாதம் இருநூறு ரூபாய் சம்பளம் கூடியிருப்பதாக அறிவித்தார்.

எழுதி வைத்திருந்த ராஜிநாமாக் கடிதத்தைக் கிழித்து அருகில் இருந்த குப்பைக் கூடையில் போட்டு விட்டேன்!

## மோபெட்களில் தனி இடம் – அதுவே சுவேகாவின் முதலிடம்.



# சுவேகா, முதன் முதலாக ஹார்டுக்ரோம் அலுமினிய சிலிண்டர்களைக் கொண்டு அதிக உழைப்பு மற்றும் அதிக ஓட்டத்தை அளிக்கிறது.

வழக்கமான வார்ப்பு இரும்பு சிலிண்டர்களுக்கு பதிலாக சுவேகா மோபெட்கள் இந்த தனித்தன்மை மிக்க சிலிண்டர்களையே உபயோகப் படுத்துகின்றன. இதன் பலன்? இந்த சிலிண்டர்கள் நீண்ட நாட்கள் உழைப்பதால் அடிக்கடி சிலிண்டர்/பிஸ்டன்களை மாற்றுவதால் ஏற்படும் செலவுகள் கணிசமான அளவு குறைக்கப் படுகின்றன. நீடித்த உழைப்பு என்றால் மொத்தத்தில் அதிகப் படியான ஓட்டம் என்பதை சொல்லித்தான் தெரிய வேண்டுமா?

### இன்னும் பல சிறப்பு அம்சங்கள்:

- செயின் இயக்கம் மற்றும் சிறப்பான சமநிலைத் தன்மைக் கேற்ப உட்புற உறுதியுடன் அமைக்கப்பட்ட பாக்ஸ் பிரிவு ப்ரேம்.
- சிக்கனம் மற்றும் எளிதான இயக்கத்திற்கு ஏற்ற ஆட்டோமாடிக் க்ளட்ச்.
- உறுப்புகளின் நீடித்த உழைப்பிற்கும், வழ வழப்பாக உருளுவதற்கும் ஏற்ற நீடில் ரோலர் பேரிங்குகள்.

இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல சுவேகாவின் விற்பனைக்குப் பிறகு பராமரிப்பு சேவைக்கான விரிவான அமைப்பு. இந்தியா முழுவதிலும் உறுப்புகள் கிடைக்கும் வசதி. இதனால் மோபெட் வகைகளில் சுவேகா முதலிடம் வகிப்பதில் வியப்பு ஒன்றுமில்லை. அல்லவா?



மோபெட்ஸ்
இந்தியா
லிமிடெட்

திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

# Suvega

சுவேகா – தன்னிகரற்ற மோபெடின் மறுபெயர்

SAA MIL 433




அத்தியாயம் 10

## பாய்ந்து வந்த கிளி

இன்பச் சித்ரவதைக்கு இலக்காகி, உணர்ச்சிகளால் உந்தப்பட்டதால் ஊமைகளாகி, ஒன்றிவிட்ட மனங்களால் ஓடும் காலத்தின் துரிதத்தை உணராமல் நின்று கொண்டிருந்த அந்த இருவரையும், தென்னஞ் சோலைக்கு இடையே இருந்த இரண்டு முந்திரி மரங்களில் உறங்க முயன்ற கிள்ளைகளின் சப்தமோ, குயில்களின் இனிய கீதமோ, காதல் என்னும் கடும் சுழலிலிருந்து மீட்க முடியவில்லை என்றால், கீழே விழுந்து கிடந்த முந்திரிப் பழுப்புக்களைச் சலசலவென்று அசைத்து ஓடித் தென்னை மரமொன்றில் ஏற முற்பட்ட ஓணானின் அபசப்தங்கூட அவர்களை விலக்க வல்லமையற்றதாயிற்று. சகல சப்தங்களுக்கும் அப்பாற்பட்ட இன்ப மந்திரம் இருவர் இதயங்களிலும் பெரிதாக ஒலித்துக் கொண்டிருந்தது.

ஆனால் அந்த இன்ப மந்திரத்தையும் மீறக் கூடிய வலிமை சில கர்ம வீரர்களுக்கு உண்டு என்பதை இந்திரஜித் அனந்த் அந்தச் சமயத்தில் நிரூபித்தான். அந்த ஏந்திழை அவன் உடலுடன் இழைந்த நேரத்தில் அவன் மனக் கண் முன்பு வேறொரு உருவம் எழுந்தது. ''இதற்குத்தான் உன்னை அனுப்பினேனா?'' என்று அந்த உருவம் கேட்டது.

''இல்லை, இல்லை'' என்று உள்ளுக்குள்ளேயே அந்த உருவத்துக்குப் பதில் சொன்னான் அவன்.

மேற்கொண்டு அந்த உருவம் கேள்விகளை வீசவில்லை. ''சிந்து துர்க்கத்தைப் பார்'' என்று மட்டும் சொல்லிவிட்டு மறைந்து விட்டது.

அது வந்து போன அந்த ஒரு விநாடியில் அவன் உணர்ச்சிகள் உறைந்தன. அதன் விளைவை அவன் கையிலிருந்த கட்டழகிகூட உணர்ந்தாள். முரட்டுத்தனமாகத் தன்னைக் கட்டி நின்ற கைகள் சிறிது பலவீனப்பட்டு விட்டதையும், தன் கால்களை நெருங்கிய கால்களும் சிறிது இடைவெளி கொடுத்து விலகிவிட்டதையும் கடல் ராணி உணரவே செய்தாள். அந்தத் திடீர் மாற்றத்துக்குக் காரணம் அவளுக்குப் புரியவில்லை. இத்தகைய சந்தர்ப்பங்களில் பலவீனப்படுவதும், கருத்தழிந்து போவதும் இயற்கையே என்பதையும் அநாதி காலமாக மனித சரித்திரமும் புராணங்களும் போதித்த பாடமென்பதையும் அவள் உணர்ந்தேயிருந்ததால், தான் நிலைகுலைந்த சமயத்தில் அனந்த் மட்டும் எப்படித் தன்னைத் திடப்படுத்திக்கொண்டான் என்பதை அறிய முடியாமல் தவித்தாள். பிரிவு அவளுக்கு வேதனையைத் தந்தது. சோதனையாகக் கூட இருந்தது. தன்னை அணுக முயன்ற எத்தனையோ வாலிபர்களைத் தூக்கி எறிந்த தன் மனம் ஒரே நாள் பழகிய இந்திரஜித் அனந்திடம் ஏன் அடிமையாகி விட்டது. அவன் கைகள் சற்று விலகியதும் தன்னுடைய உடல் எதற்காக இப்படி நடுங்குகிறது. என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். ஆகவே ''திடீரென இவருக்கு என்ன வந்துவிட்டது? ஏன் என்னை விட்டு விலகுகிறார்?'' என்று வினவையும் தொடுத்தாள்.

வாயால் அவள் அதைக் கேட்கவில்லைதான். ஆனால் அவனே சொன்னான். ''ராணி எந்த மனிதனும் கடமைக்கு அடிமை. சில நேரங்களில் அதை மறந்து விடுகிறான்'' என்று.

அவள் பதில் ஏதும் சொல்லவில்லை ''உங்கள் கடமை இன்னதென்று இன்னும் எனக்குப் புரியவில்லை'' என்று சில விநாடிகளுக்குப் பிறகு சொன்னபோதும் அவள் குரலில் பலவீனம் அதிகமாயிருந்தது.



அவளைத் தழுவி நின்ற கைகள் பூரணமாக அகன்று அவனுடைய அழகிய தோள்கள் மீது பதிந்தன. ''ராணி! முற்றிலும் இப்போது புரிய வைக்க என்னால் முடியாது. ஆனால் ஒன்று சொல்ல முடியும். சிந்துதுர்க்கத்துக்கும் என் கடமைக்கும் மிகுந்த சம்பந்தம் இருக்கிறது. ஆகவே என் கடமைக்கும் உனக்கும் கூட சம்பந்தம் இருக்கிறது'' என்றான் அனந்த்.

இதைக் கேட்ட ராணியின் கண்கள் அந்த இருட்டிலும் இரண்டு நட்சத்திரங்களைப் போல் ஜொலித்தன. ''சிந்து துர்க்கத்தின் தலைவி நான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். என் அனுமதியின்றி இங்கு நீங்கள் எதுவும் செய்ய முடியாது'' என்று கூறினாள் ராணி. அவள் குரலில் கோபம் சற்று அளவுக்கு அதிகமாகவே ஒலித்தது.

''அப்படி நான் நினைக்கவில்லை.'' சர்வ சாதாரணமாகப் பதில் கூறினான் அனந்த்.

''நினைக்கவில்லையா?''

''ஆம்.''

''ஏன்?''

''உன்னைத் தூக்கிக் கொண்டு போக இன்று காலை இரு வெள்ளைக்காரர்கள் வந்தார்கள். பிறகு ஒரு கொள்ளைக்காரனும் வந்தான், சற்று முன்பு ஒரு முஸ்லிம் வீரனும் வந்தான். நானும் சிந்து துர்க்கத்தில் யார் அனுமதியும் இல்லாமல் நுழைந்திருக்கிறேன். நான் ஓர் இந்து. இப்படியாக உன்னைத் தூக்கிக் கொண்டு போவதில் சகல மதத்தினரும் அக்கறை காட்டுகிறார்கள். எப்படியோ சகல மதத்தினரையும் சமரசப்படுத்தும் வலிமை உன்னிடம் இருக்கிறது'' என்று கூறி லேசாகச் சிரித்த அனந்த் ''இன்று காலையிலிருந்து ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது சிந்து துர்க்கமோ இந்தப் பாண்டவர் கோட்டையோ, தரையை அடுத்திருக்கும் மால்வான் கோட்டையோ அத்தனை பாதுகாப்புள்ள அரண்களாக எனக்குப் புலப்படவில்லை. அவற்றின் தலைவியான உன் நிலையும் மிக

ஆபத்தில் இருக்கிறது என்பதுதான் தெரிகிறது" என்றும் சொன்னான். கடைசிச் சொற்களில் அவனுக்கு இருந்த கவலை தெளிவாகத் தெரிந்தது.

அவன் கவலையை அவள் கவனிக்கவே செய்தாள். அதனால் அவளும் சிறிது நகைத்தாள். "வீரரே! ஏதோ இன்று நிகழ்ந்து விட்ட சில அற்ப விஷயங்களை வைத்து என்னையும் சிந்துதுர்க்கத்தையும் எடைபோட வேண்டாம். முக்கியமான போராட்டங்கள் நிகழும்போது கடல் ராணி யார், சிந்துதுர்க்கம் எத்தன்மையது என்பதைப் புரிந்து கொள்வீர்கள்" என்று கூறினாள் ராணி.

அனந்த் சில விநாடிகள் சிந்தனையில் இறங்கினான். பிறகு சொன்னான்: "சிந்து துர்க்கத்தைப் பற்றி எனக்குச் சகலமும் தெரியும். உன்னைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் ராணி! தவறாக நினைத்துக்கொள்ளாதே. எந்த ஒரு தனிமனிதரையும், எந்த அரணையும் மீறும் சக்திகள் உலகத்தில் இருக்கின்றன. உன் வீரம் மகத்தானதுதான், துணிவு நிகரற்றதுதான்.— இருப்பினும் சமயத்தில் உனக்குப் பாதுகாப்பு அவசியம்."

"எனக்கா? பாதுகாப்பா?" என்று கேட்ட ராணி சற்றுப் பெரிதாகவே நகைத்தாள்.

"ஆம். அதை அளிக்கத்தான் நான் வந்திருக்கிறேன்." அனந்தின் சொற்களில் உறுதி நிரம்பிக் கிடந்தது. ராணி நகைத்ததை அவன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை.

அவன் சொற்களில் இருந்த நிதானத்தால், அவற்றில் ஒலித்த கவலையால், உறுதியால், ராணி தனது நகைப்பை நிறுத்திக் கொண்டாள். ஆனால் கடுகளவும் கவலைப்படாத குரலில் கேட்டாள், "என்னை எப்படிப் பாதுகாப்பதாக உத்தேசம்?" என்று.



"இரண்டு வழிகள் இருக்கின்றன" என்றான் இந்திரஜித்.

"அவை என்னவோ?"

"ஒன்று உன் அனுமதியுடன் உன்னைப் பாதுகாப்பது. இன்னொன்று உன் அனுமதியைப் பெறாமலேயே உன்னையும் மீறி உன்னைப் பாதுகாப்பது."

"என்னையும் மீறி என்னைப் பாதுகாப்பீர்களா?"

"ஆகா."

"அதையும் பார்ப்போம்" என்று ராணி தனது பவள வாயில் இரண்டு விரல்களை வைத்துப் பெரிதாக ஊதினாள். அதிலிருந்து எழுந்த ஒலி அந்தச் சோலையை ஊடுருவிச் சென்றது. அடுத்தபடி தடதடவென்று பலர் ஓடிவரும் சத்தம் கேட்டது.

அதுமட்டுமல்ல. தனது இடையிலிருந்த சிறு கைத் துப்பாக்கியை மின்னல் வேகத்தில் அனந்தின் கண்களுக்குக் குறி வைத்தாள் ராணி. "கொஞ்சம் கூட அசைய வேண்டாம்." என்று எச்சரிக்கை செய்த ராணி தனது விரலும் குரலும் கலந்து எழுப்பிய ஓசை கேட்டு ஓடிவந்த வீரரிடம் "இவரை நமது சிறையில் அடைத்து வையுங்கள்" என்று உத்தரவிட்டாள்.

அனந்த் ராணியின் உத்தரவைக் கேட்டுச் சிறிதும் கலங்கினானில்லை. தனது கண்கள் முன்பு தெரிந்த கைத் துப்பாக்கியையும் லட்சியம் செய்தானில்லை. "இவர்களைப் போகச் சொல்" என்று மட்டும் கூறினான் மிக நிதானமாக.

"போகச் சொல்லாவிட்டால்?" ராணியின் கேள்வி உக்ரத்துடன் வந்தது.

"உனக்கு உள்ள ஒரே பாதுகாப்பை இழந்து விடுவாய்" என்றான் இந்திரஜித்.

"அதாவது, நீங்கள்?" இகழ்ச்சி இருந்தது ராணியின் கேள்வியில்.

"ஆம்."

ராணி நகைத்தாள். "இப்போது உங்களுக்கு வேண்டியது எனது பாதுகாப்பு, என் தயவு."

"யார் தயவிலும் அனந்த் இதுவரையில் இருந்ததில்லை."

"இப்பொழுது ஆரம்பிப்பதால் தவறில்லை."

"எப்பொழுதும் ஆரம்பிக்கத் தேவையில்லை" என்று கூறிய அனந்த் "வீரர்களுடன் செல்கிறேன். ஆனால் ஒன்று மட்டும் செய்" என்றான்.

"என்ன?"

"நடுநிசியாகப் போகிறது. வீரர்களிடம் சென்று நான் உன் மாளிகையில் படுத்துக் கொள்வதாகச் சொல்லிவிடு."

"நன்றாயிருக்கிறது!"

"என்ன சொல்கிறாய் ராணி?"

''நான் போய் நீங்கள் என் மாளிகையில் படுத்துக் கொள்ளப் போவதாகச் சொன்னால் வில்வர் என்ன நினைப்பான்?''

''தவறாக எதுவும் நினைக்க மாட்டான். வில்வருக்கு என்னை நன்றாகத் தெரியும்'' என்ற அனந்த் திரும்பிப் போகக் காலை எடுத்து வைத்தான்.

ராணியின் வீரர்கள் அனந்தைச் சூழ்ந்து கொண்டார்கள். ''சற்று நில்லுங்கள்'' என்ற ராணி, ''இந்தச் செய்தியை நான் சொல்லாமல் போனால் என்ன ஆகும்?'' என்று கேட்டாள்.

''ஆபத்து உண்டாகும்.''

''யாருக்கு?''

''உனக்கு.''

''என் கோட்டையிலேயா?''

''ஆம்.''

''என்ன ஆபத்து?''

''சிறை செய்யப்படுவாய்.''

அனந்தை ராணி உற்று நோக்கினாள். ''உங்களுக்குப் பைத்தியம் இல்லை என்று நினைக்கிறேன்'' என்றும் சொன்னாள்.

''அப்படித்தான் எல்லாரும் எண்ணுவார்கள்'' என்ற இந்திரஜித்தின் பதிலில் கேலி இருந்தது.

''என் கோட்டையில் என் வீரர்களையும் மீறி அந்த நொண்டி என்னைச் சிறை செய்து விடுவான் என்று சொல்வது விந்தையாக இருக்கிறது வீரரே!'' என்ற ராணியின் சொற்களில் இகழ்ச்சி இருந்தது.

''அவன் கால்தான் நொண்டியே தவிர அறிவு நொண்டியல்ல. ஒற்றைக் காலைக் கொண்டு அவன் சாதிக்கக் கூடியதை இரண்டு கால்களைக் கொண்ட பலர் சாதிக்க முடியாது. வில்வரைக் குறைத்து எடை போடாதே'' என்று அனந்த் எச்சரித்தான்.

அவன் எச்சரிக்கையை அவள் சட்டை செய்யவில்லை. ஆனால் சட்டென்று அவள்

---

# ''கல், கல்'' என்று சிரியுங்கள்!

சோவியத் யூனியன் விஞ்ஞானி லேவ்வெஞ்காறன், கல்லில் இருந்து காகிதம் செய்யலாம் என்று கண்டுபிடித்துள்ளார். —செய்தி




பத்திரிகை ஆசிரியர்: உருக்கமான சோகக்கதை எழுதியிருக்கேன்னு சொல்லிட்டு ஒரு வாளி நிறைய வெறும் காகிதக் கூழ்கொண்டு வந்திருக்கீங்களே, என்ன சார் இது?

எழுத்தாளர்: நான் எழுதிய கதையைக் கேட்டா கல்லும் கரைஞ்சுடும்னு அப்பவே சொன்னேன் இல்லியா? அது உண்மை ஆயிட்டுது சார்!

நண்பர்: என்ன இது தலையிலே பெரிசா கட்டு போட்டிருக்கு, எங்கேனும் விழுந்து காயம் பட்டுடுத்தா?

ஆசிரியர்: அதெல்லாம் ஒண்ணுமில்லே, நேத்து வகுப்பில் பசங்க என் மேல் 'ஏரோ' அடிச்சிட்டாங்க!

பிள்ளைகளிடம் தந்தையின் அங்கலாய்ப்பு: ''சே! இதுக்குத்தான் அப்பவே சொன்னேன். கல்லில் தயாரான பேப்பரில் எதுவும் எழுதாதிங்கன்னு: இப்ப வந்து 'பேனா நிப்பு உடைஞ்சிட்டுது. புதுசா வாங்கிக் குடு'ன்னு உயிரை எடுக்கறீங்களே!''

பத்திரிகை ஒன்றில் கேள்வி–பதில்:

கே: உங்கள் பத்திரிகையின் அட்டைப் படம் எப்படி இத்தனை வழுவழுப்பாயிருக்கிறது?

ப: இருக்காதா பின்னே! நாங்கள் கூழாங்கல்லில் இருந்து தயாரிக்கப் பட்ட காகிதம் வாங்கி இரண்டு கல்லுத் தச்சர்கள் வைத்து அவற்றை ''பாலிஷ்'' பண்ணிய பிறகு அல்லவா அட்டைப் படம்போடுகிறோம்!



எழுத்தாளர்: ஆசிரியர் சார்! நல்ல கனமான கதை இருந்தா கொண்டுவான்னு சொன்னீங்களே...!

ஆசிரியர்: ஆமாம்! அதுக்கு என்ன இப்ப?

எழுத்தாளர்: முழுக்க முழுக்க கல்லில் தயாரிக்கப்பட்ட பேப்பரிலேயே எழுதப்பட்ட கதை இது! ரொம்ப 'வெயிட்'டா இருக்கும், இந்தாங்க...

கழுதை –1: இந்த மனிதர்கள் ரொம்ப நன்றி கெட்டவர்கள்.

கழுதை–2: ஏன் அப்படிச் சொல்லுறே?

கழுதை–1: உனக்குச் சேதி தெரியாது போலிருக்கு. நாம முதுகு ஒடிய அவனுக்காகப் பொதி சுமக்கிறோம்; அவன் நமக்குக் கல்லேயும், மண்ணேயும் தின்னியாக்கப் போகிறானும்!

— கே. பிரதாப் சிங்

நிமிர்ந்து நின்றான். ''டக்! டக்'' என்று அந்தச் சோலையில் ஒரு பகுதியிலிருந்து ஒலி ஒன்று தொடர்ந்து வந்தது. அதை உற்றுக் கேட்ட ராணி அனந்தை நோக்கினாள்.

அனந்தின் முகம் கல்லாயிருந்தது. அவன் கைகள் ராணியை அணைத்துப் பிடித்தன மீண்டும். ''இவர்களை அனுப்பிவிடு ராணி!'' என்று கூறினான் அனந்த். அவன் பேச்சில் அதிகாரமிருந்தது.

''ஏன் அனுப்ப வேண்டும்?'' என்றாள் ராணி.

''வில்வர் வருகிறான்!'' இதை மிக மெதுவாகச் சொன்னான் அனந்த்.

''அதனாலென்ன?'' என்றாள் ஏதும் புரியாமல்.

''அவன் தனியாக வரவில்லை'' என்றான் அனந்த்.

''இங்கலண்ட் வருகிறானா?''

''இல்லை.''

''வேறுயார்?''

''மனிதரல்ல.''

''மனிதரல்லவா?''

''அல்ல.''

''மிருகமா!''

''அல்ல. ஒரு பறவை. அந்தச் சத்தம் கேட்டது சற்று முன்பு.''

''என்ன பறவை?''

''கிளி.''

ராணிக்கு எதுவுமே புரியவில்லை. ''கிளியால் என்ன ஆபத்து நேரிட முடியும்? வில்வருக்குக் கிளி எப்படி உபயோகம்?'' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். அந்த சமயத்தில் வில்வர் உரத்த குரலில் குடிவெறியில் பாடிய பாட்டும் பயங்கர நகைப்பும் அந்தச் சோலையை ஊடுருவின. பெரிய பஞ்சவர்ணக் கிளியொன்று பெரிதாகச் சிறகடித்துக் கொண்டு ராணியை நோக்கிப் பாய்ந்து வந்தது.

''ராணி! அபாயம் அணுகி விட்டது. இனி நீயோ நானோ தப்ப முடியாது'' என்று கூறினான் அனந்த். அடுத்த விநாடி அவன் இடது கை மிக ஆதரவாக அவள் இடையைச் சுற்றி அவளை இழுத்துக் கொண்டது அருகில். வலது கை பாய்ந்து வந்த கிளியை வெகு லாகவமாகப் பற்றிக் கொண்டது. அவன் கண்கள் மூடின, அரை நித்திரையில் இருப்பவன் கண்களைப் போல. அபாயம் எதுவாயிருந்தாலும் அதைச் சமாளிக்க 'அவன் தயாராகி விட்டான் என்பதை ராணி புரிந்து கொண்டாள். அதே சமயத்தில் வில்வர் வந்தான் எதிர்ப்புறத்திலிருந்து. அவன் தனித்து வரவில்லை.

(தொடரும்)





# ஸ்ரீ
# வேங்கடேஸ்வர
# பஞ்சரத்ன மாலை

### எல்.பி. 1 ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனங்கள்.

ஏழுமலையான் ஸ்ரீவேங்கடேசப் பெருமாளுக்கு ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீத சமர்ப்பணம்.

இசையரசி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியை, திருமலை - திருப்பதி தேவஸ்தானம், ஸ்ரீ வேங்கடேச (பாலாஜி) பஞ்சரத்ன மாலை சங்கீர்த்தனங்களை ஐந்து எல்.பி. ரிகார்டுகளில் பாடிப் பதிவு செய்து அவருடைய அருள் சங்கீதத்தை ஏழுமலையான் ஸ்ரீவேங்கடேசப் பெருமாளுக்கு அர்ப்பணிக்குமாறு கேட்டுக் கொண்டது. அதைத் தனக்கிட்ட பணியாக எண்ணி அவர் தயங்காமல் ஏற்றுக் கொண்டார்.

இந்த இசை மாலையில் முதல் முத்தாக உள்ளமெல்லாம் உருகவைக்கும் பக்திப் பரவசப் பாமாலையாக தாள்ளப்பாக்க அன்னமாச்சாரியாவின் எட்டு சங்கீர்த்தனங்கள் அமைந்துள்ளன.

ஏழுமலையான் புகழ் பரப்பும் சங்கீர்த்தனங்கள் இயற்றியவருள் முதன்மையானவர் தாள்ளப்பாக்க அன்னமாச்சார்யார். திருமலை-திருப்பதி தேவஸ்தான அறக்கட்டளையுடன் இணைந்து இந்த இசைத் தட்டுகளை பதிவு செய்யும் பேறு கிடைத்ததை பெரும் பாக்யமாக கருதுகின்றனர் கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா நிறுவனத்தார்.

இந்த சங்கீர்த்தனங்களின் புகழ் எல்லோருக்கும் எட்டும் வகையில் இந்தியாவிலும் வெளிநாட்டிலும் இந்த இசைத் தட்டுகளை விநியோகம் செய்யும் கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா.

முதல் எல்.பி. ECSD 3313 இப்போது எல்லா எச்எம்வி டீலரிடமும் கிடைக்கும்.



GCL-2165



திருமலை-
திருப்பதி
தேவஸ்தானம்




ஒளிமயமான
எதிர்காலம்




தி கிராமபோன்
கம்பெனி ஆஃப்
இந்தியா லிமிடெட்

# கலைவாணர்



ஒரு நாள் மாலை, கலைவாணர் வெளியே சென்று விட்டு மதுரபவனம் திரும்பியபோது பிற்பகல் எட்டு மணி. இறங்கியதுமே, நாதசுர வித்வான் வீருசாமி பிள்ளை வந்திருக்கிறார் என்றனர். அவர் மாடியில் ஓர் அறையில் கம்பளிப் போர்வையைப் போட்டு மூடிக் கொண்டு நடுங்கியபடி படுத்திருந்தார்.

என். எஸ். கே. உடம்பைத் தொட்டுப் பார்த்துவிட்டு, விசாரித்தபோது, சிதம்பரம் கோவில் பிரபல திருவிழாவுக்கு வாசிக்க வந்ததாகவும், பஸ்ஸில் வரும் வழியிலேயே நடுக்கமும், காய்ச்சலும் வலியும் வந்து விட்டதாகவும் சொன்னார். அதற்குள் அனந்தகிருஷ்ண பிள்ளை அண்ணாச்சி 'கடச் கட'க் கஷாயம் தயாரித்துக் கொண்டு வந்து ஒரு டம்ளரில் அவரிடம் நீட்டி, 'இதைக் குடியுங்கள், காய்ச்சல் காற்றாய்ப் பறந்து, நாளைக் காலை வாசிக்கப் போயிடலாம்' என்றார். அதை வாயில் வைத்து, சிறிது குடித்ததுமே, முகத்தை மிகக் கடுமையாகச் சுளித்தபடி, 'என்னடா இது! இவ்வளவு கசப்பா?' என்று சொன்னபடி, டம்ளரைக் கீழே வைத்தார் என். எஸ். கே. இன்னொரு டம்ளரில் அதே கஷாயத்தைச் சிறிது அதிகமாகவே விடச் சொல்லி, முகத்தில் சுளிப்போ, வெறுப்போ இல்லாமல், எரிவுக் குரல் காட்டாமல் புன்முறுவலுடன் ஒரே மூச்சில் மடமடவென்று குடித்து விட்டு, வழக்கம் போல் பேசிக் கொண்டே, ''நீங்கள் சொன்ன மாதிரி கஷாயம் அப்படியொன்றும் கடுமையாக இல்லையே!'' என்றார்.

பின் வீருசாமியும் மிகக் கஷ்டப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக அதைக் குடித்தார். இவைகளைக் கண்டு கொண்டிருந்த நான், ஒரு சொட்டு நாவில் விட்டுப் பார்த்தபோது தான் தெரிந்தது. அதன் பேய்க் கசப்பும் சுள்ளென்ற எரிப்பும்! இதை எப்படிக் கலைவாணர் பால் குடிப்பது போன்ற முகபாவத்தோடு குடித்தார் என்று வியந்தேன். வீருசாமி பிள்ளையைக் குடிக்க வைக்க இந்த வழியைக் கையாண்டார் என்பது தெரிந்தாலும், அவர் கடுமையான எதையும் இலகுவாகப் பிறருக்காகச் சிரணிக்கும் மனப்பக்குவம் உடையவர் என்பதைத் தான் அந்தச் சம்பவம் எனக்கு எடுத்துக் காட்டியது.



அந்த நாட்களில் தட்சயக்ஞம், மாயாமச்சீந்திரா படங்களின் தயாரிப்பின்போது..

கல்கத்தாவில் ஒரு நாள் வெளிப்புறப் படப் பிடிப்புக்காகச் சென்றார்கள். ஒரே மேடும், கரடு முரடுமாக இருந்த கால்வாயைக் கடந்து கொண்டிருந்தபோது சாதாரணமாகச் சுறுசுறுப்பும், வேகமும் இளமை முறுக்கும் கொண்டு பழகும் எம். ஜி. ஆர். தண்ணீரில் இறங்கிச் செல்ல வேண்டிய இடத்தில் சுமார் ஆறடியை ஒரே தாண்டாகக் குதித்துத் தாண்டினார். மற்றவர்கள் மெதுவாக நடந்தே கடந்தனர். அந்நாளில் எம். ஜி. ஆர். எப்போதும் தம்மைப் பலசாலி என்று காட்டிக் கொள்வதில் அக்கறையுடையவராக இருந்தார். அப்படித் தாண்டியதில் அவரது செருப்பில் ஒரு வார் அறுந்து விட்டது. குனிந்து பார்த்துவிட்டு, காலைத் தூக்கி வேகமாக உதறி அந்தச் செருப்பைத் தூர விழச் செய்தது மட்டுமல்ல. நல்லதாக இருந்த மறு கால் செருப்பையும் உதறித் தூர விழச் செய்தார். செருப்பில்லாமலே அன்று நடந்தார்.



பிற்பகலில் தங்கியிருந்த இடத்துக்கு வந்ததும், முதல் வேலையாகச் செருப்பு அறுந்து போன விவரத்தைச் சொல்லிப் 'புதியதாக வாங்க வேண்டும், கடைக்கு போகலாம் வாங்க' என்று என். எஸ். கேயை அழைத்தார். அவர் நிதானமாக 'அப்படியா? நாளைக்குப் போகலாம். ஷூட்டிங் இராது என்று நினைக்கிறேன்' என்றார். என். எஸ். கேயைத் தலைவராகக் கொண்டிருந்த அவர்கள் அவருக்குத் தெரியாமல் எதுவும் செய்வதில்லை.

மறு நாள் காலை எட்டு மணிக்கெல்லாம் கடைக்குப் போக மறுபடியும் அழைத்தார். என். எஸ். கே. ''என்ன செருப்புத்தானே? பத்து மணிக்குப் போவோம். இப்பத்தானே கடையே திறக்கத் தொடங்குவாங்க, அதுக்குள்ளே ஸ்டுடியோ வரை போயிட்டு வந்துடறேன்'' என்றார். மணி பத்தாயிற்று. சிறிதும் காலம் தவறாமல் வந்து விட்டார். எம். ஜி. ஆரை என். எஸ். கே. ''போகலாமா? பணம் எடுத்திண்டியா? இரு, சட்டையை மாட்டிக்கொண்டு வர்றேன்.'' என்று சொல்லி உள்ளே போனவர் 'ராமச்சந்திரா!' என்று குரல் கொடுத்து உள்ளே வரச் சொன்னார். இவர் போனதும் நாற்காலியில் உட்காரச் சொல்லி, கீழே இருந்த ஒரு காகிதப் பொட்டலத்தைக் காட்டி, ''இந்தச் செருப்பு உன் காலுக்குச் சரியாக

பொடி போடுவது சாதாரண விஷயம்தான். அதைச் சாதனைக்குரிய விஷயமாக்கியிருக்கிறார் ஜெர்மன் என்ற மேற்கு ஜெர்மனிக்காரர். ஒரு அவுன்ஸ் மூக்குப் பொடியில் ஆறில் ஒரு பங்கை ஐம்பத்து மூன்று விநாடிகளில் மூக்கால் உறிஞ்சியிருக்கிறார். உறிஞ்சிவிட்டுப் போட்டாரே ஒரு தும்மல், அவர் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடி எகிறிப் போய்ப் பார்வையாளர் மத்தியில் விழுந்தது.

அது மட்டுமின்றி அதுவரை பார்த்திருந்த பார்வையாளர்களில் சிலர் 'இது போன்ற வேண்டாத போட்டிகளை நடத்தி நேரத்தை வீணடிப்பது என்ன நியாயம்?' என்று கேட்டுச் சண்டை போட, புழுதி கிளம்பி நிறையப்பேர் தும்ம ஆரம்பித்து விட்டார்கள்!

-ஃபன்னி ஃபன்னி வோர்ல்ட்

-சாமி

✲-✲-✲-✲✲-✲-✲-✲-✲-✲✲-✲-✲

இருக்கான்னு போட்டுப் பாரேன்'' என்றார். மதுரம் ஒரு பக்கம் எதுவும் பேசாமல் லேசாகச் சிரித்தபடி இருந்தார். அதைப் பிரித்ததும் எம். ஜி. ஆர். திகைத்தார். அன்று அவர் உதறி வீசிய அதே செருப்புக்கள். நேர் செய்யப்பட்டு, பாலிஷ் போடப்பட்டிருந்தது. சற்றுக் கலங்கிப் போனார். இவர் ஏதோ பேச வாய் திறக்கு முன் என். எஸ். கே. முந்திக் கொண்டு, ''உன் பழைய செருப்புத்தான். இன்னும் ஆறு மாசம் வரும். நீ வீசி எறிந்ததைப் பின்னால் வந்த நான் பார்த்தேன். அப்பவே எடுத்து வந்து விட்டேன். ஸ்டுடியோவுக்குக் கொண்டு போய் ஆணி அடித்துக் கிளீனப் பண்ணிட்டேன். இப்போ இதுக்கு என்ன குறை? உங்கள் இருவரையும் (சக்கரபாணி) தனியாக விட்டு என்றுமே பிரிந்தறியாத உங்க அம்மா, நீங்க கல்கத்தா வர ஒத்துண்டது ஏன்? நீங்க சினிமாவில் நடித்து முன்னேறுவீங்க, நல்லாச் சம்பாதிப்பீங்க, பணம் அனுப்புவீங்க என்று எதிர்பார்த்துத்தானே? செருப்புத்தானே, என்ன பெரிய விஷயம்? புதிதென்ன, பழசென்ன? முடிந்தவரை எதையும் முழுவதையும் பயன்படுத்தப் பழகணும்'' என்று அறிவுரை கூறினார். எம். ஜி. ஆர். அவர் பொறுப்பைக் கண்டு நெகிழ்ந்து போய், மாறாத நன்றியுடன் தமது அறைக்குச் சென்றார். இந்நிகழ்ச்சியை எம். ஜி. ஆர். தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சராக வந்த பின்னும் நினைவு கூர்ந்து சொல்வதுண்டு.

—பரந்தாமன், — 'கலைவாணர்' புத்தகத்தில்!

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

# கரைகடந்த ஒருத்தி

நிலைப்பிலிருந்த குறத்தி, 'ஒருத்தி'யாகி வந்திருக்கிறது. நரிக்குறவ சமுதாயத்தின் பிரச்னைகள், அவர்கள் வாழ்க்கை முறை பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஏதாவது புதுமையாக இருக்கும் என்று எண்ணுபவர்களுக்கு ஏமாற்றம். வழக்கமான கிராமத்துப் பெரியதலைக்காரர், அவரது அடங்காத பிள்ளை, பெண்களுக்குத் தொல்லை. குடியும் கற்பழிப்பும். இப்படிக் குணங்கெட்ட கட்டாரியை மைனா என்ற குறப் பெண் காதலிக்கிறாளாம். இதுதான் கதை. நரிக்குறவர்களின் இரண்டொரு டான்ஸ், வனிதாஸ்ரீ என்ற புதுமுகம் அறிமுகம். இவை தவிரக் குறத்தியில் குறவர் சமூகத்தைப் பற்றி ஏதுமில்லை. இதர சமூகங்களுக்கும் ஒன்றுமில்லை. சிங்கியாக வரும் மதுரை ஜெயந்தி வெளுத்து வாங்கியிருக்கிறார். வனிதாஸ்ரீக்கு நல்ல முகவெட்டு. நடிக்கவும் தெரிகிறது. உழைத்தால் முன்னேறலாம்.

சில காட்சிகள் ''தணிக்கையாளர் இவற்றை எப்படி அனுமதித்தார்கள்?'' என்ற கேள்வியை எழுப்புகின்றன.

புதுமுகங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து எடுக்கப்பட்ட படம். இதன் இயக்குனர் மாந்துரை பாபுஜி இப்படத்தின் மூலமே அறிமுகமாகிறார்.

குறத்தி ஒருத்தியாகி நம்மை ரொம்ப வருத்திவிட்டாள்.

கௌசிகன்




# உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை — 2

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

வேட்பாளருக்கு அந்நாளில் தேவைப் பட்ட தகுதிகள் :

1. தீர்வை செலுத்தும் கால் வேலி நஞ்சை நிலம் உள்ளவர்கள். (''காணிலத்துக்கு மேல் இறை நிலமுடையான்.'')

2. தங்களுடைய சொந்த மனையில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறவர்கள். (''தன் மனையிலே அகமெடுத்துக் கொண்டிருப்பான்.'')

3. அறுபது வயசுக்குக் கீழும் முப்பது வயசுக்கு மேலும் உள்ளவர்கள். (''அறுபது பிராயத்துக்குக் கீழ் முப்பது பிராயத்துக்கு மேற்பட்டார்'') – இது ஒரு கல்வெட்டின் படி. இன்னொன்றில் வயசு நிர்ணயம் முப்பத்தைந்திலிருந்து எழுபது வரை உள்ளது (எழுபது பிராயத்தின் கீழ் முப்பத்தைந்து பிராயத்தின் மேற்பட்டார்.'')

4. வேத சாஸ்திரம் கற்றிருப்பவர்கள். படிப்பு மட்டும் தெரியும் என்று இல்லாமல் அதே சமயம் காரியங்களிலும் ஸாமர்த்திய முள்ளவர்கள் (''வேதத்திலும் சாஸ்திரத்திலும் காரியத்திலும் நிபுணர் எனப்பட்டிருப்பார்.'')

5. நியாயமான முறையில் அடைந்த சொத்துக்களையும், சுத்தமான நடத்தையும் உள்ளவர்கள். (''அர்த்த சுத்தமும் ஆத்ம சுத்தமும் உடையார்'') – இந்த வாசகந்தான் அத்தனைக்கும் ஜீவசாரம்!

6. மூன்று வருஷத்துக்கு மேல் ஸபையில் 'மெம்பர்ஷிப்' வகிக்காதவர்கள். (''மூவாண்டினிப்புறம் வாரியம் செய்திலாதார்.'')

7. ஏற்கெனவே ஸபையில் அங்கத்தினர்களாக இருந்தவர்களின் நெருங்கிய பந்துக்களாக இல்லாதவர்கள். (''வாரியம் செய்தொழிந்த பெருமக்களுக்கு ஆத்ம பந்துக்களல்லாதார்.'')

இந்த க்வாலிபிகேஷன்களை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்: சொத்து இருக்க வேண்டும், வரி கட்ட வேண்டும் என்று ஏன் வைத்திருக்கிறது? ''ஏழைக்குப் பிரதிநிதித்வம் வகிக்க 'ரைட்' இல்லையா?'' என்று அபேத வாதம் பேசலாம். 'ஐடியலிஸ'த்துக்கு (ஆதர்ச வாதத்துக்கு) இந்த வாதம் சரியே தவிர, அன்றாடம் ஸாதாரண ஜனங்களின் மனப்போக்குகளை வைத்து நடக்கிற 'ப்ராக்டிகலான' (யதார்த்த) ராஜ்ய காரியங்களுக்கு ஸரிப்பட்டு வராது என்று நம் மூதாதையோர் நினைத்திருக்கிறார்கள். பாலிடிக்ஸில் ஐடியலிஸத்தை விட யதார்த்தத்துக்கும் லௌகிகத்துக்கும் தான் முக்கிய இடம் தரவேண்டும் என்றே அர்த்த சாஸ்திரம் உண்டான நாளிலிருந்து சோழர் காலம் வரைக்கும் பார்க்கிறோம். சொத்து, சுதந்திரம் உள்ளவன்தான் லஞ்சம் வாங்குகிற வாய்ப்பு குறைச்சல். அதோடு கூட, அவன் பொறுப்பில்லாமல் அதை விட்டு ஓட மாட்டானாதலால், ஊரோடு இருந்து, ஊர் கஷ்ட நஷ்டங்களை எப்போதும் தெரிந்து கொள்ளும்படியிருக்கும். வெறும் ராஜ மான்ய நிலத்திலேயே காலம் கழிக்கிறவனுக்கு அதை விட்டு ஓடவும் இடம் ஏற்படும் என்பதால்தான் வரி கட்டுகிறவனாக இருக்க வேண்டும் என்றும் விதி செய்திருக்கிறது. வேத வித்தையில் சிறப்புப் பெற்றவர்களாகவும், –வேத பாஷ்யம் போதிக்கிறவர்களாகவும் இருக்கிறவர்கள் மற்றவர்களை விடவும் திரவிய சபலத்துக்கு ஆளாகாமலிருப்பார்கள் என்ற நம்பிக்கையின் பேரில் இப்படிப்பட்டவர்களுக்கு மட்டும் மிகக் குறைச்சலான நிலமுள்ளவர் இருந்தாலும் போதும் என்று 'எக்ஸெம்ப்ஷன்'' (விதிவிலக்கு) கொடுத்திருக்கிறது. (''அரைக் காணிலமே உடையானாயினும் ஒரு வேதம் வல்லானாய், நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்காணித்தறிவான்''.)

முப்பது அல்லது முப்பத்தைந்து வயசுக்குக் கீழே இருக்கிறவனுக்கு அநுபவம் போதுமானதாயிராது. அறுபது அல்லது எழுபது வயசுக்கு மேல் ஆகிவிட்டால் விருத்தாப்பியத்தின் ஓய்ச்சலில் காரியச் சுறுசுறுப்பு இராது; ஞாபக மறதி, வியாதி முதலியன அதிகம் இருக்கும். அதோடு அந்தக் காலத்தில் அந்த வயசில் விவேக வைராக்யாதிகளிலேயே புத்தி அதிகம் போய், எதிலும் ரொம்பப் பட்டுக் கொள்ளாமல், தப்புத் தண்டா நடந்தால் கூட, 'என்னமோ எல்லாம் ஈச்வர லீலை' என்று விட்டு விடத் தோன்றும். பொது நிர்வாகத்தில் இப்படிப் பட்ட மனப்பான்மை கூடாது. நல்ல உணர்ச்சி வேகமும், கண்டிப்பும் இருக்க வேண்டும். இதனால் வயசுக்கு 'லோயர் லிமிட்'டோடு 'அப்பர் லிமிட்'டும் விதித்திருக்கிறது.

(தொடரும்)

# பூக்குழி



## லக்ஷ்மி

### 7

மீனா சன்மனில் கட்டிட வேலைகளில் ஈடுபட்டிருந்த ஒரு பெரிய அமெரிக்க நிறுவனத்தில் காமேஷ் ஒரு இன்ஜினியர் — ஏறக்குறைய ராஜ்குமாரைப் போன்ற சம்பளமும் சலுகைகளும் கிடைத்துக் கொண்டிருந்தன. ஆனால் அவன் இரண்டாண்டு கால ஒப்பந்தத்தில் தான் வந்திருந்தான். ஒப்பந்தம் மறுபடியும் தொடரும் என்ற நம்பிக்கை இருக்கவில்லை — தாய்நாட்டிற்குத் திரும்ப வேண்டும், வேலை தேடிக் கொள்ள வேண்டும், என்று பற்பல கவலைகள் அவனைக் குடைந்து கொண்டிருந்தன.

அவன் வேலை பார்த்த அந்த இடத்திலேயே கம்பெனியின் குடியிருப்புப் பகுதியும் இருந்தது. கம்பெனியின் தயவால் வசிக்க ஒரு சிறு ஃபிளாட்டும் கிடைத்திருந்தது. கல்யாணமாகாதவர்களுக்கு என்ற ஒரு படுக்கையறை கொண்ட சிறு ஃப்ளாட் அது. ஆனால் எல்லா வித வசதிகளுக்கும் குறைவிருக்கவில்லை. கை நிறைந்த சம்பளத்தையும் — சுகமான வாழ்க்கையையும் விட்டுப் போகும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறதே என்று உள்ளூற வேதனைப் பட்டுக் கொண்டுதான் இருந்தான். ராஜ்குமாரைப் போல் எப்பொழுது ஒப்பந்தகாலம் முடியும், ஊருக்குக் கிளம்புவோம் என்ற ஆவல் அவனுள் இல்லை. அப்படி ஆசையுடன் வரவேற்க அவனுக்கு என்று சொல்லிக் கொள்ள ஊரில் சொந்த பந்தங்கள் யாரும் இருக்கவில்லை. உண்மை நிலையில் அவன் ஓர் அனாதை.

வார இறுதிகளில் பெரும்பாலான நாட்களை அவன் ராஜ்குமாரின் வீட்டில் கழிப்பதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தான். எப்பொழுதாவது சில சமயங்களில் நண்பனைத் தன் ஃப்ளாட்டிற்குச் சாப்பிடவும் — தங்கவும் அழைப்பதும் உண்டு.

அன்று மாலை அவர்கள் இருவரும் வேலைக்குப் பின் சந்தித்துக் கொண்டனர். பொழுதின் கனத்தைக் கரைக்க விமான நிலையம் வரை நண்பனைக் காரில் ஒரு சிறுபயணத்திற்கு அழைத்துச் சென்றான் ராஜ்குமார்.

''பட்டிக்காட்டான் யானையைப் பார்க்கிறதுபோல என்பாங்க. கான்கார்ட் விமானம் புறப்பட்டுச் செல்வதை வேடிக்கை பார்க்க வந்து இங்கே நின்னுட்டு இருக்கோம்.'' காமேஷ் சிரித்தான். அதே சமயம் கன்கார்ட் விமானம் ஒன்று கோஷமிட்டபடி வானத்தை நோக்கி எழும்பியது. வியப்புடன் இருவரும் பார்த்துக் கொண்டு நின்றனர்.

''உண்மையில் நான்தான் பட்டிக்காட்டான். நீ பெரிய பட்டணத்து ஆசாமியாச்சே. பம்பாய்வாசி'' ராஜ்குமார் கேலியாக அவன் தோளை மெல்லத் தட்டினான்.

''நானும் ஒண்ணு சொல்ல முடியும். நீ பட்டிக்காட்டுப் பணக்காரன். நான் பட்டணத்துத் தொழிலாளி வர்க்கம்னு சேர்த்துக் கூறலாம். எப்படி ஜோக்?'' காமேஷ் உரக்கச் சிரித்தாலும் அவன் வார்த்தைகள் ராஜ்குமார் மனசை சுருக்கென்று தான் தைத்தன.

மிக நெருக்கமாகப் பழகினால்தான் ஒருத்தருடைய குணம் நமக்குப் புரியும். அகல்யா அடிக்கடி சொல்வாள். அது எவ்வளவு பெரிய உண்மை.

நட்புரிமை பாராட்டி மிகவும் நெருங்கிப் பழகியதால் அவன் ஒரு விஷயத்தை இதற்குள் புரிந்து கொண்டிருந்தான்.

என்னவோ ஒரு காரணத்தினால் — காமேஷிற்கு வாழ்க்கையிலே ஒரு சிறு கசப்புத் தட்டி விட்டிருக்கிறது. தன்னிடம் அவன் ஏன் மனத்தைத் திறந்து பேசக்கூடாது? உள்ளத்தை உறுத்திட காரணம் ஏதாவது இருந்தால் அதை நிவர்த்திக்கத் தன்னால் முடிந்த உதவியை அவன் செய்யத் தயாராக இருந்தானே?

பரிவுடன் நெருங்கி வரும் நல்ல நண்பனிடமே படபடவென்று பேசி மெல்ல ஒதுங்கிக் கொள்கிறானே. ஏன்?

வழியில் கடைத்தெரு பகுதியில் காமேஷ் ஓர் அரபு உணவுக் கடையருகே வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கினான்.

''நீ சைவ உணவுக்காரன் — இல்லாட்டா காரம் மசாலா போட்டுச் சமைச்சிருக்கிற கறிக் குழம்பை உனக்கும் சேர்த்து வாங்கிட்டு வந்திருப்பேன். உனக்கும் எனக்கும் சாப்பிட

கப்பூஸ் வாங்கிண்டு வந்திருக்கேன்.. நீ உள்ளே வந்து என்னோட சாப்பிட்டுட்டுத்தான் போகணும் — இன்னிக்கு நாயர் கடை சோற்றை மறந்துடு'' என்றான்.

மறுக்க முடியாது ராஜ்குமார் காரை மனுசல்மனுக்கு செலுத்தி அந்தக் குடியிருப்புப் பகுதிக்குச் சற்றுத் தொலைவில் நிறுத்தினான். இருவரும் இறங்கினார்கள். இரண்டாவது மாடியில் தான் அவனது பிளாட் இருந்தது. கதவைத் திறந்ததும் குளிர் சாதனத்தின் குளுமை வரவேற்றது. ஆனால் அறையில் நிலைமை வரவேற்கத் தக்கதாகவே இருக்கவில்லை.

ஆண் அழகன் பகட்டாக உடுத்திக் கொள்ளத் தெரிந்து கொண்டிருந்தான். ஆனால் காமேஷுக்குத் தன் சூழ்நிலையைப் பற்றி அதிகம் அக்கறையே இருந்ததில்லை. அந்த ஒரு கணத்திலே அவன் தன்னைவிட எப்படி மாறுபட்டிருக்கிறான் என்று அடிக்கடி ராஜ்குமார் எண்ணி வியந்ததுண்டு.

காமேஷைப் போல் அவனுக்குப் பிறருடைய சோப்பு — சீப்பு — துவாலை எதையும் உபயோகிக்கப் பிடிக்காது. சுத்தமாக வாழ அவன் தாயார் அவனை அப்படிப் பழக்கி வளர்த்திருந்தாள். வீடு—ஆடைகள்—பழக்கங்கள் எல்லாம் சுத்தமாக இருக்க வேண்டும் என்று விரும்பும் பெண் அகல்யா. நாளைக்கு இரு வேளைகள் குளித்து வேறு உடுத்திக் கொண்டு எப்பொழுதும் பளிச்சென்று காணப்படுவான். அந்தப் பழக்கம் வேறு அவனைத் தொத்திக் கொண்டு விட்டிருந்தது. ஊரிலேயே அவன் தினமும் இருமுறை குளிக்கத் தொடங்கியிருந்தான். வெப்பம் மிகுந்த அந்த நாட்டில் நாள் முழுதும் குளித்துக் கொண்டே இருக்க வேண்டும் போல்தானிருந்தது அவனுக்கு.

ஆனால், காமேஷ்? அத்தனை வெப்பத்திலும் நாளைக்கு ஒரு தடவை குளிப்பானோ.... சந்தேகமே.

அவனது வரவேற்பறையில் எல்லாம் போட்டது போட்டபடி கிடந்தன. காலையில் படித்த பத்திரிகை — இரவு புகைத்த சிகரெட் துண்டங்கள் நிறைந்த ஆஷ் டிரே.. பாதிக் குடித்து மீதம் வைத்திருந்த மது பாட்டில், கண்ணாடி டம்ளர்கள், என்று மேஜையை நிறைத்துக் கொண்டிருந்தன.

''உன்னைப் போல் துடைச்சு, பெருக்கி வீட்டை நருவிசா வச்சுக்க எனக்குப் பழக்கமில்லே. ஆனால் நல்லாவே சமைக்கத் தெரியும். காலையிலே வச்ச பருப்பு சாம்பார் இருக்கு. அப்பூஸ் கூட நீ அதைச் சாப்பிடலாம். சூட வச்சுக் கொண்டு வரேன்.'' சொல்லிக் கொண்டு சமையலறைக்குள் ஓடினான் காமேஷ்.

சோபா மீது தாறுமாறாகக் கிடந்த திண்டுகளை ஒழுங்கு செய்து விட்டு ராஜ்குமார் உட்கார்ந்து கொண்டான்.

''இந்த கேக்கை கொஞ்சம் ருசி பார்... நானே சுட்டது...'' ஒரு பீங்கான் தட்டிலே சிறு கேக்குத் துண்டத்தை வைத்து எடுத்துக் கொண்டு இடது கையில் பிடித்திருந்த சிகரெட்டை இடையே ஓர் இழுப்பு இழுத்துக் கொண்டு வந்தான் காமேஷ்.

''நான் கேக்கு சாப்பிடுவது உண்டு. ஆனால் இன்னிக்கு சாப்பிட மாட்டேன். மன்னிச்சுக்கோ....''

திகைப்புடன் நண்பன் முகத்தைப் பார்த்தான் காமேஷ்.

''இங்கிலீஷ் காலண்டர் தேதிப்படி இன்னிக்கு என் தந்தை மறைந்த நாள். எட்டு வருஷத்துக்கு முந்தி மாரடைப்பால் திடீர்னு போயிட்டார். அம்மாவுக்கு அந்த அதிர்ச்சியே வியாதியாகி விட்டது. அவருக்குத் திவசம் கொடுக்க அம்மாகூட நான் இப்போ இல்லாட்டியும், அவர் மறைஞ்சு போன காலண்டர் மாத தேதியன்னிக்காவது



விரதமாக இருப்பது வழக்கம். கேக்கிலே முட்டை போட்டுச் சுட்டிருப்பே. இன்னிக்குச் சாப்பிட மாட்டேன். கோவிச்சுக்காதே.''

''உன் தந்தை மேலே உனக்கு அத்தனை பாசம். பிரியம் இல்லையா?''

''மதிப்பு,மரியாதைன்னு சொன்னு பொருந்தும்.''

''அவருக்கு உன் மேலே ரொம்ப பிரியம் இருந்திருக்கணுமே. நீ அவருக்கு ஒரே பிள்ளையாச்சே?''

''என் மேலே உசிரையேதான் வச்சிட்டு இருந்தார். அவர் மட்டும் வாழ்ந்து கொண்டிருந்தால் இப்படி வெளிநாட்டுக்கு வரவிட்டிருப்பாரா? பட்டணத்தில் நான் படிக்கிற காலத்தில், மாசத்துக்கு ஒரு தடவை என்னை வந்துஹா ஸ்டலில் பார்க்காட்டா அவருக்கு நிம்மதியே இருக்காது. அப்பா மேலே எனக்கு ரொம்ப மதிப்பு உண்டு. ஆனால் அம்மா மேலேதான் எனக்கு ரொம்பப் பாசம்.''

''இருக்காதா பின்னே? பத்து மாசம் சுமந்து பெத்தவங்களாச்சே. உன்னுடைய குடும்பத்து போட்டோவை காட்டினப்போ பார்த்தேனே. உங்கப்பா வாட்டசாட்டமா முருக்கு மீசையோடு கன கம்பீரமாக இருக்கார். நீ சாயலில் உங்கப்பா போலத்தான் இருக்கேன்னு சொல்லணும். உங்கம்மா...''



மேலே முடிக்காது காமேஷ் தட்டை மேஜை யின் ஒரு புறத்தில் வைத்துவிட்டு — சிக ரெட்டை ஆழமாக இழுத்து ஊதினான்.

''அப்பா உசிரோட இருந்தப்போ எடுத்த படம் அது. அதிலே அம்மா காஞ்சிபுர பட்டு சேலையும் — கழுத்து நிறைஞ்ச நகையும் நெற் றியிலே நிறைச்ச பொட்டுமாக அலங்காரமா இருக்காங்க. அவங்களே இப்போது விதவை யாகப் பார்க்கும் போது என் மனசு வேதனைப் படத்தான் செய்கிறது. பாவம் அம்மா...''

''நீ ஒருவகையில் கொடுத்து வச்சவன், உன் அப்பாவைப் பார்த்துப் பழகி, வளர உனக்கு வாய்ப்பு அமைஞ்சிருந்தது. எனக்கு நினைவு தெரியறதுக்கு முந்தியே அப்பா போயிட்டார். என் தாயை நான் எப்பவும் விதவைக் கோலத்தில் வேலையால் அழுக்காகி விட்ட கிழிந்த புடவையில்தான் பார்த்திருக் கிறேன். தன்னைக் கவனிக்கப் பொழுதில் லாமல் சதா அடுப்படியிலே நெருப்பு கிட்ட வெந்து கிட்டு — வியர்வை ஒழுக அவர்க ளுடைய களைச்ச முகம்தான் என் நினைவிலே ஆழமா படிஞ்சிருக்கு. அவர்களை நல்லா வச்சக்கணும்னு நினைச்சதுண்டு. ஆனல் சந்தர்ப்பம் தான் சரி செஞ்சுகடுக்க.''

''கேட்க எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு.''

''என்னோட கூட வருத்தத்தைப் பங்கிட்டுக் கொள்றதைத் தவிர நீ வேறு என்ன செய்ய முடி யும்? தோற்றத்திலே ஒன்னு இருக்கிறோம்னு அதிசயப்படறவங்க, நம் வேறுபட்ட வாழ்க்கை நிலையையும் புரிஞ்சுக்கிட்டா ரொம்ப ஆச்சரியப் படுவாங்க. நிச்சயம். அடடா.. நான் உனக்குச் சாப்பிட ஒண்ணும் கொடுக் காம பேசிக்கொண்டே போறேனே.. இரு கப்பூஸ், ரொட்டியை எடுத்து வரேன்.'' உள்ளே சென்ருன் காமேஷ்.

''இன்னிக்கு நான் பால் பழங்கள் மட்டுமே சாப்பிடறதாக உத்தேசம். நீ வீணு சிரமப் படாதே. நான் பிரிட்ஜிலேருந்து அதுகளே எடுத்துக்கிறேன்.'' எழுந்திருந்தான் ராஜ் குமார். குளிர்சாதனப் பெட்டியிலிருந்து ஓர் ஆப்பிளையும் பால் பையையும் வெளியே எடுத்தான். ''இதை மட்டும் கொஞ்சம் சூடு படுத்திக் கொடு போதும்.''

ஆப்பிள் பழத்தைத் துண்டமிட்டு ஒரு தட்டில் வைத்து ஒரு கோப்பையில் சூடான பாலை நிறைத்துக் கொண்டு வந்து நண்பன் அருகே வைத்து விட்டு அவன் கப்பூஸ் ரொட் டியுடன் கறிக் குழம்பைத் தொட்டுத் தின்ன உட்கார்ந்து விட்டான். சுக்கா ரொட்டி என்று நெய் தடவாது அகல்யா கட்டு அம்மாவுக்குத் தரும் ரொட்டியைப் போல் எத்தனை பெரிசு! ஒரு கால் வாசியைக் கூட தின்ன முடியாது போல் காணப்பட்ட அந்தப் பெரிய ரொட்டியை வேகமாகப் பிய்த்து விரை வில் கறிக் குழம்புடன் காலி செய்து விட் டான் காமேஷ். சாப்பாட்டிலும் அப்படி யொரு ஆவேசம் அவனுக்கு. வியப்புடன் விழித்தான் ராஜ்குமார்.

பார்வைக்கு ஓங்கி உயரமாகச் செவே ரென்று மூக்கும் விழிகளுமாக அழகான தோற்றமுடையவன் காமேஷ். அதுவும் நாசூக்கான உடையிலே கம்பீரமானதொரு கனவானகத்தான் காட்சி யளித்தான்.. நெருங்கிப் பழகும்போதுதானே தெரிகிறது? மனம் நோகுமே என்று பாராத ஆத்திர மான பேச்சுக்கள், மட்டமான குணங்கள்.. ம்.... அழகான ஆண்பிள்ளைக்குள்ளே ஒரு சிறு அரக்கன் ஒளிந்து கொண்டிருப்பது அரு கில் வந்தால்தானே புரிகிறது?

இவன் மட்டும் தன்னைத் திருத்திக் கொண் டால் எத்தனை நல்லதொரு நண்பனுக இருப் பான்? மூளையில் எங்கேயோ ஒரு வக்கிர புத்தி ஏன்? தனக்குள்ளே எண்ணியபடி பாலை மெல்லப் பருகிவிட்டு, பழத் துண்டு களைச் சாப்பிடத் தொடங்கினான் ராஜ்.

''உனக்கு ஒன்று காட்ட வேண்டும்'' என்று சொல்லி அலமாரியிலிருந்து ஒரு புகைப் படத்தை எடுத்து வந்தான் காமேஷ்.

(தொடரும்)

# அன்பார்ந்த நேயர்களுக்கு...



பத்திரிகை அச்சாவதற்கு இறக்குமதி செய்யப்படும் நியூஸ் பிரிண்ட் காகிதத்தின் விலை அபரிமிதமாக உயர்ந்து விட்டது. இன்னமும் உயர்ந்து கொண்டே இருக்கிறது. இது தவிர அட்டைப்படம் அச்சாவதற்கான மாப்லித்தோ காகிதத்தின் விலையும் இரு மடங்காகி விட்டது. இதனல் நமது நிறுவனத் துக்கு ஏற்படும் நஷ்டத்தைக் கடந்த மூன்று மாதங்களாகப் பல்லைக் கடித்துக் கொண்டு தாங்கி வந்தோம். இனியும் தாங்கிக் கொள்ளச் சக்தியற்ற நிலையில் மனவருத்தத்துடன் வருகிற 14—10—79 **வானவில் சிறப்பிதழிலிருந்து** கல்கி பத்திரிகையின் விலையை 90 **காசாக** உயர்த்த முடிவு செய் துள்ளோம். வாசகர்கள் இந்த விலை உயர்வைப் பொருட்படுத் தாமல் தொடர்ந்து கல்கிக்குத் தங்கள் நல்லாதரவை அளித்து வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

மானேஜர், **கல்கி**

தமிழ் பத்திரிகை உலகில்
முதல் முறையாக
**Blow up Poster!**
தனியே எடுத்து உங்கள் இல்லத்தின்
சுவரை அலங்கரிக்கலாம் ✳

முதல் BLOW UP POSTER:
**ரஜனிகாந்த்**
**கல்கி** நவம்பர் 4உ இதழுடன்



பின்புறம் பொழுதுபோக்கு
அம்சங்கள்!

**சிறப்பிதழ்கள்:**

அக்டோபர் 14உ
**வானவில் சிறப்பிதழ்**
8 சிறுகதைகள்!

நவம்பர் 18உ
**திரை இசை சிறப்பிதழ்**
'சலன்' தயாரிப்பு

ஜனவரி 6உ
**'80**
**ஸ்பெஷல்** அதிக பக்கங்கள்
மும்மடங்கு மகிழ்ச்சிக்கு:
**புஷ்பா தங்கதுரை**
**ஹேமா ஆனந்ததீர்த்தன்**
ஆகியோரின்
புதிய தொடர்கதைகள்
'செம்பியன்' எழுதும்
முழுநீள நாவல்

YOU WILL FALL IN LOVE
WITH HER STYLE!

**மதஜ மிருத்தியுஞ்சயன்**
எழுதும்

# முற்றுப் பெறாத வாக்கியங்கள்...

தொடர் கதை **கல்கி**
நவம்பர் 4உ இதழில்
ஆரம்பம்



+ PLUS மீ.ப.சோமு வழங்கும்
**நீங்காத நினைவுகள்**
அனுபவக் கட்டுரைகள்



கோ-ஆப்டெக்ஸின் மாற்றம்
மகத்தான தோற்றம்
அழகு மகளிர்
ஆவலோடு வாங்கி
அணிவதெல்லாம்
கோ-ஆப்டெக்ஸ்
சேலைகளையே !
சிறப்புத் தள்ளுபடி
20%
20-10-79 .வரை

மணங்கவரும் அழகுக் கோடுகளாக—வரிசை வரிசையாக
வசந்தகால வண்ண மலர்களாக—
கோடைக்காலக் குளிர்பூக்களாக—பூச்சரங்களாகக்
காட்சி தரும் ரகங்களில்—
எண்ணற்ற வகைகளில்—
தன்னிகரற்ற சேலைகளை
கோ-ஆப்டெக்ஸ் படைக்கிறது!



# வட்ட மேஜை

● என்னதான் நகைச்சுவைக்காக எழுதப்பட்டிருந்தாலும் ஆத்திகர் மனத்தைப் புண்படுத்தும் வகையில் அந்தத் துணுக்கு அமைந்திருப்பதைக் கவனிக்க மறந்து விட்டீர்களே. 62ம் பக்கத்தில் பிரசுரிக்கப் பட்டிருக்கும் 'கலப்பு மண ஆதரவாளர் கிருஷ்ணனின் இரு பக்கத்திலும் வள்ளி தெய்வயானை பொம்மைகளை வைத்த' கொனு 'ஜோக்கைத்தான் குறிப்பிடுகிறேன்.

வேண்டாம் இதுபோன்ற விஷமத்தனமான ஜோக்குகள்!

அரகண்டநல்லூர் கே. பிரதாப் சிங்

● தான் நடித்த நூற்றியொரு படங்களையும் அழகாகத் தொகுத்து வழங்கியுள்ளார் திரு சிவகுமார். அவரது சில படங்கள் வியாபார ரீதியில் தோல்வி யடைந்திருக்கலாம். ஆனால் 'அலட்டிக் கொள்ளாமல் நடிப்பவர்' என்ற இமேஜை ரசிகர்களிடையே உருவாக்கியுள்ளார் என்பதை மறுக்க முடியாது.

திருச்சி-8 எஸ். பி. முருகப்பன்

● சிவகுமார் நூற்றியொரு படங்களைப் பற்றியும் குறிப்பிடுகையில் தன்னைப் பற்றி (மற்ற நடிகர்களைப் போல்) ஓர் இடத்திலும் பீற்றிக் கொண்டு இருக்காதது கண்டு ஆச்சரியப் பட்டேன்.

திருப்பூர்-1 ப. திருமுருகன்

● சிவகுமார் 101 கட்டுரை தொடக்கத்திலிருந்து முடிவடையும் வரை சுவை குன்றாமல் இருந்தது. தகுந்தாற்போல் புகைப் படங்களும் சிறந்து விளங்கின.

கொனக்குடி சஞ்சீவி ராவ்

● இஸ்லாமியத் துணுக்குகள் இரண்டும் மிகவும் சிறப்பாக இருந்தன. கவி கா. மு. ஷெரீப் சிறந்த கவிஞர், சிறந்த எழுத்தாளர், சிறந்த பேச்சாளரும் கூட. மாதம் ஒரு முறையாவது அவருடைய கருத்துக்களைவெளியிடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை ஜீ. அகமது

● ''விசுவரூப கணபதி தரிசனத்தை — பம்பாயில் நடப்பதை—இங்கே சென்னையிலிருந்தே—கண்டு களிக்கச் செய்து புண்ணியம் கட்டிக் கொண்ட உமக்கு எப்படி நன்றி சொல்வேன் நான்?

சென்னை-4 மயிலை கோபி

● மாருதியின் ஓவியத்தைப் பார்த்த உடனேயே கதையைப் படிக்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. 'கண்ணியிலிருந்து தப்பிய மான்' கதையைத்தான் குறிப்பிடுகிறேன். புதுமையான உத்தியைப் புகுத்தி அருமையானதொரு நடையில் கதையை எழுதியுள்ளார் 'சுப்ரபாலன்'.

நாகப்பட்டினம் நாகை வியெஸ்.

● ஹிஹிஹி .... ஹோ! ஹோ! ஹோ....! ஹிஹோ கதை, மன்னிக்கவும் ஈகோ கதை பிரமாதம். சிரித்துச் சிரித்து வயிறே புண்ணாகிவிட்டது. உமாசந்திரனை ஒரு பாட்டில் மருந்து அனுப்பச் சொல்லுங்கள். வயிற்றுவலிக்குத்தான்.

கோவில்பட்டி தெ. சிவமுருகன்

● ஆண்டு இதழில் வாசகர்களுக்காக இன்னும் நிறையச் செய்ய வேண்டும். உழைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன் என்று குறிப்பிட்டிருந்தீர்கள். தற்போது ஆரம்பித்திருக்கும் கடுகு பதில், சினிமா மசாலா போன்றவை பிற பத்திரிகைகளின் பிரதி பலிப்பே தவிர, கல்கியின் புதுமைக்குத் தாங்கள் வெளியிடும் சிறப்பிதழ்களும், தரம் வாய்ந்த சிறுகதைகளும்தான் சான்று!

பெங்களூர்-5 அ. குமார்

● கல்கி சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற எழுத்தாளர்களை முறைப்படி அறிமுகம் செய்துள்ளீர்கள். 'ஜெயகதா' என்ற பெயரில் எழுதும் இளம் எழுத்தாளர் திரு அமர்நாத் அவர்கள் ''தன்னுடைய விழிகளைக் கண் தானம் செய்வதாக இப்பொழுதே பதிவு செய்து வைத்திருக்கிறார்'' என்று படித்தவுடன் என் உள்ளம் நெகிழ்ந்தது.

மதுரை கே. ராமகிருஷ்ணன்

● ''மீண்டும் இந்திரா'' தலைவர்களின் மூடத்தனத்துக்குச் சரியான சவுக்கடி! பதவிப் போராட்டத்தில் தமது அறிவையே இழந்த அரசியல் மேதைகளுக்கு மோட்டு விரலில் விட்ட ஒரு குட்டு!

சென்னை-38 ஈ. டி. மூர்த்தி

● எத்தனையோ அகட விகடங்கள் செய்து ஆட்சியைக் கைப்பற்றினார்களே ஜனதாக் காரர்கள், வைத்துக் காப்பாற்றுவதற்கு வக்கிருந்ததா அவர்களுக்கு?

பட்டாளம் டி.எஸ். வீரராகவன்

● ஏனைய தலைவர்களின் மூடத்தனமான செயல்களாலோ எப்படியோ இந்திரா மறுபடியும் பதவிக்கு வந்துவிட்டால் அதைப் பெரும்பாலான இந்தியக் குடிமக்கள் வரவேற்று மகிழ்வார்களே யன்றி வருத்தப் படப் போவதில்லை.

தஞ்சை என். வி. சுப்பராமன்

● ஏது! கல்கி கூட வெள்ளித் தட்டில் பிரதமர் பதவியை வைத்து மீண்டும் இந்திராவை அழைத்துத் தந்துவிடும்போலிருக்கிறதே! கல்கியும் அது போன்ற தேச நலனில் அக்கறையுள்ள இதர பத்திரிகைகளும் பேனா வலிமையினால் 1977ல் நடத்திக் காட்டிய அற்புத சாதனையை மீண்டும் இந்தத் தேர்தலின்போதும் நடத்திக் காட்ட வேண்டும்.

தஞ்சை காந்தி ஆசிரமம் கிருஷ்ணன்.



# மானஸாவின் மாங்கல்ய பூஜை

ஜெயசுதா

மங்கள துர்க்கா தேவி ஆலயம்.

மாங்கல்ய பூஜை தொடங்கிற்று. கண்டா மணி ஒலித்தது. துந்துபி முழங்கிற்று. சங்க நாதம் எழுந்தது. தேவியின் திருச்சந்நிதி எதிரேயுள்ள பலிபீடத்தின் முன், அவந்தி நாட்டு பட்டத்து ராணி மானஸ பிருந்தா தேவி தியானித்துக் கொண்டு நிற்க, அவள் நெஞ்சுக்கு நேராகப் பலிபீடத்தில் ஒரு தங்கத் தாம்பாளம் வைக்கப்பட்டது. ராணிகழுத்தில் அணிந்தபடியே, தனது வைரத்தாலியை அந்தத் தாம்பாளத்துக்கு நேரே நீட்டி, பய பக்தியுடன் அபிஷேகம் செய்யத் தொடங்கினுள். முதலில் வாசனைதைலம். பின்னர்சந்தனம். அதற்குப் பின் தேன், பால், பன்னீர் என்று வரிசையாகத் தொடர்ந்து முடிவில் கங்காஜலத்தில் அபிஷேகம் செய்து, மஞ்சள் பூசி, குங்குமமிட்டு, பூவினுல் அர்ச்சித்தாள். கூடி நின்ற ஆயிரம் சேடியரும், அர்ச்சகரும் 'தீர்க்க சுமங்கலிபவ' என்ற கோஷத்துடன் மலர் தூவ, ராணி ஆழ்ந்த பக்தியுடன் தனது மாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு, அம்மனின் திருப்பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்தாள். இந்த அசாதாரணமான மாங்கல்ய பூஜைக்கு ராணி ஏற்பாடு செய்ததற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது.

ராணி மானஸ பிருந்தா தேவியும், ராஜு பிருத்விராஜசிம்மனும் மனமொன்றிய அரச தம்பதிகள். மெய்க்காவல் படையினர் நூறு பேரை மட்டும் நகரில் நிறுத்தி வைத்துவிட்டு, தனது வலிமை மிக்க பெரும் படையுடன் ராஜு கூர்ச்சர நாட்டின்மீது படையெடுத்துச் சென்றிருந்தான். அதை எப்படியோ ஒற்றர் மூலம் அறிந்துகொண்ட மாளவ நாட்டு மன்னன், சமயம் பார்த்து, அவந்தி நாட்டின் மீது படையெடுத்து விட்டான். மூன்று நாட்களாக முற்றுகை தொடர்ந்து கொண்டிருக்கிறது. ராணி மானஸபிருந்தா தேவியின் மீது பெரும் பொறுப்பு வீழ்ந்தது. எப்படியாவது எதிரியிடமிருந்து தன் நாட்டைக் காப்பாற்றியாக வேண்டும். ராணி இந்தச் சவாலை தீர நெஞ்சத்துடனேயே சந்திக்க முனைந்தாள். இளவயதிலிருந்தே ராணி, ஏனைய அரண்மனைப் பெண்டிரைப் போல் ஆடல், பாடல் அலங்காரங்களில் மனத்தைச் செலுத்தாமல், வீர விளையாட்டுக்களில் கவனம் செலுத்தியவள். அவந்தி நாட்டுப் பட்டத்து ராணியானதும் முதல் காரியமாகத் தனது அந்தப்புரத்திலிருந்து ஆயிரம் சேடியருக்கும் சிறுகச் சிறுக யானை ஏற்றம், குதிரையேற்றம், வாள் சண்டை, விற்சண்டைகளில் பயிற்சி அளிக்க ஆரம்பித்தாள். இத்தகைய சாகஸ விளையாட்டுக்களில் ஈடுபடுவதையே அரண்மனைப் பெண்டிரின் பொழுது போக்காக அமைத்தாள். ராணி ஈடுபட்ட ஒரே மென்மையான பொழுது போக்கு புறுவை வளர்த்ததுதான். ராணியிடம் ஒரே மாதிரியான அழகிய ஆறு புறுக்கள் இருந்தன. அவற்றை உள்ளன்போடு நேசித்தாள் ராணி. அவற்றுடன் இடைவிடாது பழகிப் பழகித் தனது மனத்தையே அவை புரிந்து கொள்ளும்படி பயிற்சி கொடுத்திருந்தாள்.

நெருக்கடி நேரம் வந்தாயிற்று. முதற் காரியமாகத் தன் பிரியத்துக்குகந்த வெண் புறுக்களில் ஒன்றினை அழைத்து அதன் காலில் ஒரு லிகிதத்தைக் கட்டி ராஜுவுக்குத் தகவல் அனுப்பி வைத்தாள். அந்த லிகிதத்தில் மாளவ மன்னன் முற்றுகை யிட்டு விட்டதாகவும், இன்றிலிருந்து இரண்டாம் நாள் சூரியன் மறைந்த ஒரு நாழிகைக்கு அரண்மனைக் கிழக்குக் கோட்டை வாயிலுக்கு முழுப் படையுடன் வந்து சேர்ந்து விடுமாறும் தெரிவித்திருந்தாள்.

மறு தினம் இன்னொரு புறுவின் காலில் ஒரு லிகி தத்தைக் கட்டி, முத்தமிட்டு, வானில் பறக்க விட்டாள்.

அந்த வெண் புறு கிழக்கு வாயிலைத் தாண்டிப் பறந்தபோது, மாளவ மன்னனும், அவனது சேனதிபதியும் அதைக் கவனித்து விட்டனர்.

சட்டென்று சேனதிபதி கவண் கல்லினுல் அப்புறுவினைத் தாக்க, அது அடிபட்டு, இவர்கள் காலடியில் வந்து விழுந்தது. மறு கணம் பரபரப்புடன் அதன் காலில் கட்டியிருந்த லிகிதத்தை எடுத்து மன்னனிடம் கொடுத்தான் சேனதிபதி.

மன்னன் படித்தான்.

அன்பு மணுளன் ராஜு பிருத்விராஜசிம்மனுக்கு, அடியவளின் அனந்தகோடி நமஸ்காரம். நேற்று அனுப்பிய லிகிதத்தின் மறு பதிப்பு இது. எதிர்பாராத காரணத்தால் அந்த லிகிதம் தங்களை வந்து அடையாமல் போய் 'விட்டால், இதுவாவது தங்களைச் சேரட்டும் என்பதற் காகவே வரைந்துள்ளேன். முதல் லிகிதத்தில் கண்டுள்ளபடியே, இன்றைக்கு மறு நாள்

அமாவாசை அன்று சூரியன் மறைந்தவுடனேயே கிழக்குக் கோட்டை வாயிலுக்கு ஒரு பெண்ணாக மாறுவேடம் புனைந்து கொண்டு வந்து விடுங்கள். சட்டென்று வாயிற் கதவு திறந்து உங்களை உள்ளே அழைத்துக் கொள்ளும். கோட்டையின் உள்ளிருந்து கொண்டு அரசரான தாங்கள் போர் புரிவது பாதுகாப்பானது என்று நான் கருதுவதால், தாங்கள் அவசியம் இவ்வாறு செய்தாக வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். இப்படிக்கு, தங்கள் பிரிய ராணி மானஸ பிருந்தா தேவி.

"சேனாதிபதி, பார்த்தீர்களா இந்த ராணியின் சாகஸத்தை! நாம் பெரும் அதிர்ஷ்டசாலிகள். நல்ல வேளையாக இந்த லிகிதம் நம் கைக்குக் கிடைத்தது. அரசன் பெண் வேடத்துடன், அரண்மனைக் கோட்டைக்குள் நுழையு முன்னரே பிணமாக்கப்பட வேண்டும். அரசன் இறந்து விட்டால்... பிறகு கோட்டை தானே சுலபமாக நம் கைக்கு வந்து விடும். தலைவனை இழந்து விட்டோம் என்று தெரிந்தாலே படைகளின் வீரம் சிதறி விடும். கவனம் வையுங்கள்."

மேலும் தொடர்ந்தான் மன்னன்:

"அப்படியே இன்னொரு முக்கியமான விஷயம். நமதுபடை மொத்தத்தையும் ராணாவை எதிர்நோக்கித் திருப்பி நிறுத்துங்கள். கோட்டையை நெருங்குவதற்கு முன்னரே கூட, முடிந்தால் ராணாவைத் தீர்த்துக் கட்டி விடலாம். ஆனால் நாம் இருவரும் மட்டும் கிழக்குக் கோட்டை வாயிலை ஒட்டிப் பார்வையைக் கவனமாக வைத்திருப்போம். இந்த லிகிதப்படி ஏதோ மர்மமான வழி இருப்பதாகவும், அதன் மூலம் ராணா கோட்டைக்குள் நுழைய முடியும் என்றும் தெரிகிறது. அப்படி நுழைய முற்படும்போதே ராணாவை நாம் ஒழித்துக் கட்டிவிட வேண்டும்."

அங்கே அரண்மனையின் உப்பரிகையில் ஒரு மறைவிடத்தில் இருந்து கொண்டு ஒரு பிரத்தியேகத் தொலைக் கண்ணாடியின்மூலம் இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தாள் ராணி. அவள் அதரத்தில் ஒரு மர்மமான புன்னகை நெளிந்தோடிற்று. தான் திட்டமிட்டபடியே அந்த லிகிதத்தை எதிரி நாட்டு மன்னன் கையில் சிக்க வைத்ததில் அவள் பெரிதும் மகிழ்ந்து போனதை அவளது மலர்ந்த முகம் உணர்த்தியது.

மறு கணம் ராணி பரபரப்பாக இயங்கினாள். இரண்டு சேடியரை அழைத்து, தான் வெளியே கிளம்பச் சித்தப்படுத்துமாறு பணித்தாள். அரண்மனை வாயிலில் ஒரு கம்பீரமான வெண் புரவி வந்து நின்றது. அதில் பாய்ந்து ஏறினாள் ராணி. சேடியர் தனிப் புரவிகளில் பின்தொடர, குதிரையைத் தட்டி விட்டாள். ஆயுதசாலையின் பொறுப்பாளரையும் குதிரை லாயத்தின் பொறுப்பாளரையும் சந்தித்துச் சில கட்டளைகளைப் பிறப்பித்தாள்.

அடுத்து அவசர கால விசேஷ கண்டா மணி ஒலித்தது. நூறு ஆபத்துதவிகளும் தத்தமது புரவிகளில் விரைந்து வந்து மந்திராலோசனை மண்டபத்தில் கூடினார்கள். ராணி வந்து சிங்காதனத்தில் அமர்ந்தாள்.

"நாளை மாலை சூரியன் அஸ்தமிக்கு முன் நீங்கள் யுத்த சன்னத்தராகக் கிழக்குக் கோட்டை வாயிலின் முன் கூட வேண்டும். அப்போது 'நமது ராணா இறந்து விட்டார்' என்ற அறிவிப்புக் கேட்கும். உடனே, நீங்கள் கோட்டைக் கதவைத் திறந்து கொண்டு எதிரிகள் மீது பாய வேண்டும்" என்றாள் ராணி.

ஆபத்துதவிகளிடையே பதைபதைப்பு.

"என்ன சொன்னீர்கள்? நமது ராணா இறந்து விட்டார் என்ற அறிவிப்பா?"

மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு ராணி சொன்னாள். "ஆம்."

"மகாராணி!..." கொதித்துப் போய், அனைவரும் தங்கள் வாட்களை உருவினார்கள்.

ராணி கம்பீரமாக மொழிந்தாள்.

"முதலில் வாளை உறையில் போடுங்கள்: அரசர் வேற்று நாடுகளுக்குப் படையெடுத்துச் செல்லும்போது, என்னை ராஜப் பிரதிநிதியாக இங்கு நியமித்து விட்டுப் போகிறார் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? இப்போது



நான் ராணியாக உங்கள் முன் நிற்கவில்லை. ராஜப் பிரதிநிதியாக நிற்கிறேன். இது என் ஆணை. உடனே நிறைவேற்றுங்கள்.'' சற்று இடைவெளி விட்டு மீண்டும் சொன்னாள்: ''உங்களை விட ராணாவின் உயிரின் மேல் அதிக அக்கறை கொண்டவள் நான் என்பதை மறவாதீர்கள்.''

இதைக் கேட்டபோது அனைவரின் கண்களும் ராணியை ஏறிட்டு நோக்கின. ராணியின் விழிகளில் தெறித்த தீவிரமான ஏதோ ஒரு சக்தி அவர்களை அப்படியே ஆட்கொண்டன. ராணியின் மீது ஒரு கணம் அவநம்பிக்கை கொண்டு விட்டதற்காகத் தங்களையே நொந்து கொண்டனர்.

ராணி மிக மர்மமான திட்டம் ஒன்றை வைத்திருக்க வேண்டும்!

''எங்களை மன்னித்துப் பொறுத்தருளுங்கள் தேவி.''

மண்டியிட்டுச் சிரம் தாழ்த்திய அவர்களை, உடனடியாக மங்கள துர்க்கா தேவி ஆலயத்தில் ஒரு விசேஷ பூஜைக்கு ஏற்பாடு செய்யுமாறு பணித்தாள். அந்த பூஜையில் தான்,அவந்தி நாட்டுராணி மானஸ பிருந்தா தேவி அந்த அசாதாரணமான மாங்கல்ய



பூஜையை நடத்தினாள். ஆம். அவள் தன் மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள் : 'என்ன இருந்தாலும் என் வாய் வழியாக அப்படி ஒரு வார்த்தை சொல்ல நேர்ந்த விதியை நொந்து கொள்கிறேன். அவரது நீண்ட ஆயுளை வேண்டி, அவர் அணிவித்த இந்தப் புனிதத் திருமாங்கல்யத்தை. அம்பிகையே... உன் திருமுன்னால் பூஜிக்கிறேன். நீ அருள்வாயாக!' மறு நாள் சூரியன் மலைவாயிலில் விழும் நேரம். அரண்மனை வாயிலில் ஆயிரம் புரவிகள். அனைத்திலும் யுத்த சன்னத்தராக, முழு ஆயுத பாணியராக, அந்தப்புரப் பெண்டிர் வீற்றிருந்தார்கள். அவர்களுக்கு முன்னதாக ராணி. ஆனால்... ராணி ஏனோ ஆயுதபாணியாக இல்லை. ராஜாவை மணந்த நாளன்று உடுத்தியிருந்த ஆடை அணிமணி அலங்காரங்களுடன், புது மணப் பெண்ணின் தோற்றத்திலேயே இருந்தாள். சேடியரைப் பின்தொடர ஆணையிட்டு விட்டு, புரவியைக் கம்பீரமாகக் கிழக்குக் கோட்டை வாயிலை நோக்கி விரைவாகச் செலுத்தினாள்.

வாயிலை நெருங்கியவுடன், அனைவரும் என்னவென்று புரிந்து கொள்வதற்கு முன் ஒரு காரியம் செய்தாள் ராணி. சட்டென்று குதிரையிலிருந்து தாவி, வாயிலை யொட்டிய படிக்கட்டுகளின் மீதேறி மதில் சுவரின் மேல் பாய்ந்து ஓடினாள் ராணி. உண்மையில் அங்கு கூடியிருந்த அனைவருக்கும் அவள் எந்தக் கணத்தில் கீழே இறங்கினாள், எப்போது மதில் மேல் ஏறினாள் என்பதே புரியாத அளவுக்கு அப்படி மின்னலெனச் செயல்பட்டிருந்தாள்,ராணி. அதே சமயம். கோட்டைக்கு வெளியே இருந்து ஆகா, ஓகோ...வென்று ஆரவாரம் கேட்க ஆரம்பித்தது. மறு கணம் ராணி கோட்டைக்குள்ளேயே குதிக்கப் போவது போன்றதோர் பாவனையைக் காட்ட, அதற்குள் ''அதோ. அதோ.... ராஜா அதோ ஓடுகிறார். அங்கே, அங்கே... மதில் மேலே....'' என்ற கூச்சலுக்கிடையே மளமளவென்று பத்துக்கும் மேற்பட்ட ஈட்டிகள் ராணியின் மேனியைத் துளைத்து அவளை அங்கேயே சாய்த்து விட்டன.

கோட்டைக்கு வெளியே ஒரே பரபரப்பு. மாளவ மன்னன் சேனாதிபதியிடம் வியப்போடு குரல் கொடுத்துக் கொண்டிருந்தான். ''நமது இருவரின் கண்காணிப்பையும் மீறி எப்படி ராஜா கோட்டையையும் நெருங்கி மதில் மேல் ஏற முடிந்தது? இன்னும் ஒரு வினாடி தாமதித்திருந்தாலும்... நல்ல வேளை, அதிருஷ்டம் நம் பக்கம். ராஜாவைச் சாகடித்து விட்டோம். சேனாதிபதி! நம் படையினருக்கு உடனே அறிவியுங்கள்.''

'ராஜா இறந்து விட்டார்... ராஜா இறந்து விட்டார்' செய்தி அலை அலையாகப் படையினர் அனைவருக்கும் பரவ, அனைவரும் மகிழ்ச்சி மிகுதியால் தத்தமது படைக்கலங்களைக் கீழே எறிந்து விட்டு உற்சாக மிகுதியுடன் அடுத்தவரைக் கட்டித் தழுவிக் கொண்டு ஆனந்தக் கூத்தாடினர். ராஜாவை எதிர் நோக்கித் திருப்பி வைக்கப்பட்டிருந்த படை. மொத்தமும் தத்தமது போர்க் கருவிகளைக் கீழே போட்டுவிட்டு, கோட்டை வாயில் பக்கம் விரைய முற்பட்டனர். ஒரே நாழிகையில் மாளவப் படையின் கட்டுக் கோப்பு மொத்தமும் கலைந்து சிதறிவிட்டது.

சேனாதிபதி முரசம் கொட்டினான். ''அவந்திப் பிரஜைகளே, உங்கள் ராஜா இறந்து விட்டார். கோட்டைக் கதவைத் திறந்து விட்டு எங்களிடம் சரணடைந்து விடுங்கள்.''

**ம**று கணம். கோட்டைக் கதவு திறந்தது! மின்னலெனப் பாய்ந்து வெளியேறிய ஆபத்துதவிகள் இரு கிளைகளாகப் பிரிந்து, எதிரிகளைச் சுற்றி வளைக்க ஆயிரம் சேடியரும் புரவிப் படையை நடத்தி எதிரிகளை ஊடுருவிச் சாய்க்க, அதே சமயம் ராணியின் முதலாவதும் கடைசியுமான ஒரே விதத்தில் கண்டுள்ள பிரகாரம் தம் படைகளைத் திருப்பி நடத்தி வந்த ராஜா பிரத்விராஜ சிம்மன், எதிர்ப்புறமிருந்து தாக்க, ஒரு பெரும் சக்கர வியூகம் அமைந்து, எதிர்பாராத சூழ்நிலையில் பொறியில் அகப்பட்ட எலிகளைப் போல் மாளவப் படை மொத்தத்தையும் சின்னாபின்னப்படுத்தி விட்டது. அரை நாழிகைக்குள் மாளவ மன்னன், அவந்தி மன்னனின் பிடியில் அகப்பட்டுக் கொண்டு விட்டான். மாளவ மன்னனின் விழிகள் குழப்பத்தால் விரிந்தன. ''என்ன ராஜா பிருத்விராஜசிம்மரா? அப்படியானால் மதில் மேல் இறந்து பட்டுக் கிடப்பது?'',

பிருத்விராஜ சிம்மனும் ஒன்றும் புரியாதவனாய் மதில் மேல் பார்வையை ஓட்டினான். அங்கே... ஒரு குறிப்பிட்ட இடத்தில்... வெண் புறாக்கள் படபடவென்று சிறகை அடித்தபடி சுற்றிப் பறந்து கொண்டிருந்தன. அவனுக்கு எல்லாம் புரிந்து விட்டது.

''ராணி....''

அவனது அவலமான குரலுக்குப் பதில் கொடுக்க, தியாகவல்லி மானஸ பிருந்தாவின் உடலில் உயிர் இல்லை. ஆனால் அவனுக்குப் பதிலாக அவள் அன்புடன் வளர்த்த வெண் புறாக்கள் அவளது ஒளிரும் மாங்கல்யத்தைக் கவ்விக் கொண்டு அவனை நோக்கி விரைந்து பறந்து வந்தன.

---

இலங்கையில் புகைவண்டியை (ரயிலை) புகை ரதம் என்று அழைக்கின்றனர். எல்லா ரயில்களிலும் புத்த குருமார்கள் அமருவதற்கென்று தனி இடங்களை ஒதுக்கியிருக்கின்றார்கள்.

கொழும்பில் சுற்றுப் பயணிகளுக்கென மிக அழகான புகை வண்டிகளைச் செலுத்துகின்றனர். பயணிகள் அமரும் சீட்டுக்கள் நாற்புறமும் சுழலும் வகையில் பொருத்தப் பட்டுள்ளன.

-பி. நாராயணன்



பெண்கள் தங்கள்
மனோபாவங்களை
அநேக அழகான வழிகளில்
வெளிப்படுத்துகிறார்கள்.

விமல்
அவற்றில்
ஒன்று !

VIMAL®
A RELIANCE PRODUCT

100% பாலியெஸ்டர் புடவைகள்

உங்களுடைய விமல் விற்பனையாளரிடம் கேட்டு வாங்குங்கள் [illegible], ராயல் ஜெம், பாலியெஸ்டர் [illegible] க்ரேப்.
அத்துடன் ஸில்க் ஸில்மோர், ஸ்வீட் [illegible], கோல்டன் மிக், [illegible] மற்றும் [illegible].

® is the Registered trademark of Reliance Textile Industries Ltd

VIMAL SS/2A/79 TAM

# நான் கண்ட ரஷ்யா

## அகிலன்

இருபத்தி ஐந்து மாதங்களாகப் பகைவர்கள் தொடர்ந்து விமானங்களிலிருந்து குண்டு வீசியதால் அங்கு உயிர் இழந்தவர்கள் 17,000 பேர்; காயமடைந்தவர்கள் 34,000 பேர். ஆனால் பசியினாலும் பட்டினியாலும் குளிரினாலும் இறந்தவர்களோ 6,32,000 பேர். 1942ஆம் ஆண்டு வரையில் இறந்தவர்களை அவர்கள் லெனின்கிராடு நகரத்துக்குள்ளேயே பல்வேறு புதைகுழிகளில் புதைக்க முயன்றிருக்கிறார்கள். அதற்கு மேல் அவர்களால் முடியவில்லை. நகரத்துக்கு வெளியில் 30 கிலோ மீட்டர் தொலைவில் இருந்த ஒரு கிராமம் முழுவதும் பிறகு புதைகுழியாக மாற்றப்பட்டு விட்டது. குளிராலும், உறை பனியாலும் தரை கெட்டிப்பட்டுப் போயிருந்ததால், அவர்களால் எளிதில் புதைகுழிகளை வெட்ட முடியவில்லை. வெடி குண்டுகளால் தரையைப் பிளந்து பெரிய பெரிய பள்ளங்களை ஏற்படுத்தி அவற்றில் நூற்றுக்கணக்கான சடலங்களைக் குவித்திருக்கிறார்கள். 26 ஹெக்டர் தொலைவில் இப்படி நீண்டு கிடக்கும் அந்தக் கல்லறையில் புதைக்கப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கை 4,70,000 பேர்.

நாங்கள் அந்தக் கல்லறையின் வாயிலுக்குச் சென்றபோது அதன் இரு புறங்களிலும் கட்டப்பட்டிருக்கும் இரண்டு சிறு கூடங்களைக் கண்டோம். அவற்றில் போர்க்காலத்து லெனின்கிராடு நகரத்தின் படங்கள் போர்முனைகளின் படங்கள், குண்டு வீச்சுக்களால் பாழ்பட்ட தெருக்களின் படங்கள் முதலியன இருந்தன. அவை எல்லாவற்றையும்விட என்னுடைய நெஞ்சை உருக்கிய ஒரு முக்கியமான காட்சி, 11 வயதுப் பெண் தான்யாவின் படமும் அவள் எழுதி வைத்த நாட்குறிப்பின் படமும்தான். அவளுடைய டைரியின்படி 1941ஆம் ஆண்டு அவள் குடும்பத்தில் ஒருவரும், 1942இல் அதே குடும்பத்தில் 7 பேர்களும் இறந்துபோய் இருக்கிறார்கள். பெற்றோர், சகோதர சகோதரிகள், பாட்டன் பாட்டியாக அவர்கள் இருக்க வேண்டும். கடைசியாக, அவள் எழுதிய குறிப்பில் ''தான்யாவின் குடும்பத்தில் எல்லோருமே இறந்து போய்விட்டார்கள், தான்யாவைத் தவிர'' என்று குறிப்பிட்டிருக்கிறாள். அதன் பின்னர் அவளும் ஒரு நாள் அந்தப் போர்க் கொடுமை தாளாமல் இறந்து போயிருக்கிறாள். குற்றுயிராய்க் கிடந்த அவளைப் பிழைக்க வைக்க முயன்றிருக்கிறார்கள். முடியவில்லை.

கல்லறையின் முன்னால் அணையாத ஜோதி ஒன்று எப்போதும் எரிந்துகொண்டிருக்கிறது. அதைத் தாண்டிச் சென்றால் எதிரே கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும் நமக்கு வலது புறத்திலும் இடது புறத்திலும் வரிசை வரிசையாகப் புதைகுழிகள். திரும்பிய பக்கமெல்லாம் புதைகுழிகள். நீண்ட சதுரங்களாக உள்ள அந்த ஒவ்வொரு குழிக்குள்ளேயும் நூற்றுக்கணக்கான பேர். 1942 என்றோ, 1943 என்றோ அதன் உள்ளே உறங்குபவர்கள் எந்த ஆண்டில் இறந்தவர்கள் என்பதை மட்டிலும் அங்கே நிறுத்தப்பட்டுள்ள நடுகற்கள் கூறுகின்றன. நமக்கு நேரே மிகத் தொலைவில் கல்லால் செதுக்கப்பட்ட லெனின்கிராடு என்னும் தாய் தன் மக்களுக்காகச்

✖ லெனின்கிராடிலுள்ள மாமன்னர் பீட்டரின் சிலைகளில் ஒன்று





✖ பீட்டர் ஹாஃப் மாளிகைமுன் பளிங்குச்சிலை



✖ மாமன்னர் பீட்டர்

சோகமே உருவான நிலையில் கரங்களில் ஒரு மலர் வளையத்துடன் காட்சி தருகிறாள். அவள் காலடியில் ஒவ்வொரு நாளும் நகரவாசிகள் மலர்ச் செண்டுகளைக் கொண்டு வந்து குவித்தவண்ணமாக இருக்கிறார்கள். ஏனெனில், அந்த நகரத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பத்தினரும் தங்கள் குடும்பத்தில் ஒருவரையோ அல்லது ஒருசிலரையோ அந்த முற்றுகையின் போது பறி கொடுத்தவர்கள். லெனின்கிராடு நகரத்தில் திருமணம் செய்துகொள்ளும் புதுமண



✖ பழங்கால கட்டிடங்கள் கொண்ட லெனின்கிராட் தெரு

மக்கள் திருமணம் முடிந்தவுடன் நேரே அந்தக் கல்லறைக்குச் சென்று மலர் வளையம் வைக்கும் காட்சியை நான் கண்டு பெருமூச்சு விட்டேன்.

நகரத் தாயின் காலடிக்குச் சென்று, போரில் வீர சொர்க்கம் எய்திய அந்த நகரவாசிகள் அனைவருக்கும் நாங்களும் எங்கள் வணக்கத்தைச் செலுத்தினோம். சிலைக்குப் பின்புறம் உள்ள சுவரில் ஒரு கவிதை பொறிக்கப்பட்டிருந்தது. அதன் பொருளை எங்களோடு வந்த மெரினாவிடம் கேட்டேன். முற்றுகையின் துன்பங்களை நேரில் அனுபவித்த ஓல்கா பெரின்கோல்ட்ஸ் என்ற பெண்மணி எழுதிய கவிதை அது:

''புரட்சியின் தொட்டிலான உங்கள் லெனின்கிராடைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றியவர்களான — ஆண்கள் — பெண்கள் — குழந்தைகள் — ராணுவத்தார் — பொதுமக்கள் — பலர் இங்கே உறங்குகிறார்கள். இவர்களின் பெயர்களோ, எத்தனைபேர் இங்கு புதையுண்டு கிடக்கிறார்கள் என்பதோ, நமக்குச் சரியாகத் தெரியாது. ஆனால், எல்லோரும் தெரிந்துகொள்ள வேண்டியது இதுதான்: நாங்கள் யாரையும் — எதையும் மறந்துவிடவில்லை. மறந்துவிடமாட்டோம்.''

நான் அன்று கண்ட காட்சி என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத காட்சி. ரஷ்ய மக்களின் வீரத்துக்கும் தீரத்துக்கும் தியாகத்துக்கும் மன உறுதிக்கும் எடுத்துக்காட்டான காட்சி.

## ரஷ்யச் சிரிப்பு



## 7. மன்னரைப் போற்றும் மக்கள்

மன்னர் ஆட்சி முறையையும் பிரபுக்களின் ஆதிக்கத்தையும் புரட்சியால் வேரறுத்துவிட்டு மக்கள் ஆட்சியை நிலைநாட்டிய ரஷ்ய மக்கள், மன்னர் குலம் முழுவதையும் அடியோடு வெறுத்து ஒதுக்கி யிருப்பார்கள் என்றுதான் முதலில் நான் நினைத்தேன். அவ்வாறே பிரபுக்கள் குடும்பங்களில் பிறந்தவர்களையும் அறவே மறந்திருப்பார்கள் எனக் கருதினேன்.

ஆனால் சோவியத் அரசினரும் மக்களும் அப்படிச் செய்யவில்லை. புரட்சிக்கு முற்பட்ட காலத்தில் யார் யார் மக்களிடம் அன்பு கொண்டு அவர்கள் நலனுக்காக உழைத்து வந்தார்களோ — அவர்கள் அரசர்களாக இருந்தாலும் பிரபுக்களின் வழியில் வந்தவர்களாக இருந்தாலும்—அவர்கள் நினைவைப் போற்றி வருகிறார்கள். புரட்சிக்கு முன்பு தோன்றிய சாதனைகளையும் பெருமக்களையும் அவர்கள் தங்கள் வரலாற்று ஏடுகளிலிருந்து மறைத்துவிடவில்லை. நான் சென்று வந்த பல குடியரசுகளிலும் அவர்களுடைய இந்தப் பண்பை நினைவுச் சின்னங்களின் வாயிலாகவும் கண்காட்சி வாயிலாகவும் கண்டு வியந்தேன்.

லெனின்கிராட் நகரத்தை 1709ல் தோற்றுவித்த பீட்டர் என்ற அரசரை அவர்கள் மாமன்னர் பீட்டர்—Peter the Great என்று பெருமையோடு குறிப்பிடுகிறார்கள்.. மிகச் சிறந்த போர் வீரராகவும் ஆட்சித் திறன் படைத்தவராகவும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் அவர் திகழ்ந்திருக்கிறார். ரஷ்யாவின் வடக்குப் பகுதியை ஸ்வீடன் கைப்பற்றிக் கொண்டதால், பால்டிக் கடல் வழியாக மேற்கு ஐரோப்பிய நாடுகளுடன் ரஷ்யா வாணிபம் செய்ய முடியவில்லை.. ஆகவே ஸ்வீடனைப் போரில் முறியடித்தது மல்லாமல், வடக்கு எல்லையிலேயே செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் என்ற நகரத்தை உருவாக்கி, மாஸ்கோவிலிருந்த தமது தலைநகரத்தை அங்கு மாற்றிக் கொண்டிருக்கிறார். விசாலமான சாலைகளுடனும், நகரின் மத்தியில் ஓடும் ஏராளமான கால்வாய்களுடனும், பல பூங்காக்களுடனும் நீவா நதிக் கரையில் திட்டமிட்டுக் கட்டப்பெற்ற நகரம் செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் நகரம்; — அதாவது இப்போதைய லெனின்கிராட்.

ரஷ்யாவிலிருந்து மட்டு மல்லாமல், பிற ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் தலைசிறந்த கட்டிட நிபுணர்களையும் சிற்பிகளையும் நகர நிர்மாணத்துக்காக வரவழைத்திருக்கிறார். முன்பு சதுப்பு நிலமாக இருந்த பகுதியில் உருவாக்கப்பட்ட நகரம் அது. ஆகவே நகரில் குடியேறும் ஒவ்வொருவரும் அவரவர் வீட்டுக்கு முன்பு தெருவில் பதிப்பதற்கான கற்களை அவரவரே வெளியூர்களிலிருந்து கொண்டு வரவேண்டும் என்று கட்டளை பிறப்பித்திருக்கிறார்!

நகரை அழகு படுத்துவதற்காக உலகின் பல பாகங்களிலிருந்தும் அபூர்வமான மரங்கள், பூச்செடிகள், பறவைகள் போன்றவை அவரால் வரவழைக்கப்பட்டிருக்கின்றன. மாமன்னர் பீட்டரால் 270 ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கப்பட்ட 'கோடைக் காலப் பூங்கா' இன்று கவனமாகப் பராமரிக்கப்படுகிறது. நான் சென்றிருந்தது கோடை காலமாதலால், நண்பர் வித்யாலங்காருடனும் வழிகாட்டியான மெரினா என்ற பெண்மணியுடனும் அந்தப் பூங்காவில் மாலையில் உலாவச் சென்றேன். அங்கு மாலை நேரம் என்றால் நமக்கு இரவு ஒன்பது மணிக்கு மேல்! பூங்காவின் மரத்தடிகளில் கிடந்த நீண்ட பெஞ்சுகளில் பல நூற்றுக் கணக்கான லெனின்கிராட் வாசிகள் பொழுது போக்க வந்திருந்தனர் — கணவன் மனைவியர், காதலர், முதியோர், குழந்தைகள் முதலிய பலப் பலர்.

அந்தப் பூங்காவின் ஓர் ஓரத்தில் மிகப் பெரிய குளம்; பூங்காவின் மையத்தில் இரு வரிசையாக அற்புதமான பளிங்குச் சிலைகள்; மொத்தம் 82 சிற்பங்கள். எல்லாச் சிற்பங்களுமே கலை நுணுக்கங்கள் நிறைந்தவையாக இருந்தாலும் அவற்றில் ஒன்று என்னை மிகவும் கவர்ந்தது. வெற்றிக் கடவுளான ஒரு பெண் தேவதை ஓர் இளைஞனின் தலையில் வாகை சூடுவது போன்ற சிலை அது. அந்தச் சிலையைப் பற்றிய விளக்கம் கூறிய மெரினா, இதற்கு ஓர் உட்பொருள் இருக்கிறது: புராணக் கதை ஒன்றை இது அடிப்படையாகக் கொண்டாலும் ஸ்வீடனுடன் நடந்த போரில் வெற்றி பெற்ற மாமன்னருக்கு வெற்றித் தேவதை மலர் வளையம் சூடுகிறாள் என்பதைச் சிற்பி கட்டிக்காட்டியுள்ளார்'' என்றார்.

எனக்கு உடனே கங்கைகொண்ட சோழபுரம் கோவிலில் உள்ள ஒரு சிற்பம் நினைவுக்கு வந்தது. சிவனும் உமையும் அருகருகே அமர்ந்திருக்க, சிவனின் காலடியில் கரம் கூப்பி அமர்ந்திருக்கும் ஓர் அடியாருடைய மணிமுடியின் மீது சிவபெருமானே மலர் மாலை சுற்றி விடுகிறார். — கங்கை கொண்ட சோழப் பேரரசர் ராஜேந்திரரின் வெற்றியை நினைவுகூரும் சிற்பம் அது. லெனின்கிராட் நகரம் எங்கே? கங்கை கொண்ட சோழபுரம் எங்கே? — சிற்பக் கலை வெளிப்படுத்தும் உட்பொருளில் இவற்றுக்கிடையே நிலவும் ஒற்றுமை என்னை மெய்சிலிர்க்கச் செய்தது. (தொடரும்)

---

பழமொழி: கண் கெட்டபிறகு சூரிய நமஸ்காரமா?

புதுமொழி: காலம் கடந்த பிரமச்சாரிக்கு 'மாட்ரிமோனியல்' காலமா?

— ஸ்ரீ: நடராஜன்












**டார்டாய்ஸ்** கொசு-வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போர்ட், பம்பாய்-400 023. போன்: 273831




## அத்தியாயம் 10

## ரௌத்ராகாரம்!

**திலகம், காதரைக் கவனிக்கலாம்**

இருள். இடுப்பில் தூக்க முடியாமல் சரிந்துகொண்டே மனோகரி. பாதங்களில், கணுக்காலில் ஆடு சதையில் எல்லா இடங்களிலும் குத்தும், கீறும், முட்கள். பயம் வியர்வை, மூச்சிரைப்பு.

திலகம் எங்கே ஓடுகிறோம் என்று தெரியாதபடி இலக்கில்லாமல் ஓடினாள். நாய் குரைக்கும் சப்தம் கேட்டது. பாதையில் பஸ்கள் ஓடும் சப்தம் கேட்டது. வேலி தடுக்கிறவரைக்கும் ஓடினாள். விண் என்று கட்டப்பட்டிருந்த முள் வேலி. புகுந்து செல்வதற்கு இடைவெளி போதவில்லை. தொட்டுத் தொட்டு அதனூடேயே நடந்தாள். திரும்பிப் பார்த்தாள். தூரத்தில் டார்ச் ஒளி விளையாடுவதும் அந்த ஒளி வட்டம் தன்னை நோக்கி அசைந்து துடித்துக் கொண்டு நடந்து வருவதும் தெரிந்தது. நாய் குரைக்கும் சப்தம் ஒன்று அதன் முன்பு தாவித் தாவி வருவது கேட்டது.

திலகத்தின் மிக அதிக பயம் பலமாக மாறியது. ஒரு முரட்டுத் தூக்கலில் தன் பெண்ணைத் தோளில் ஏற்றிக் கொண்டாள். முள் கம்பி மேல் காலை வைத்து மற்றொரு காலை உயர்த்தி எகிறிக் குதித்து அந்தப்புறம் விழுந்தாள். விழுந்த மனோகரி தன் தாயோடு பசை போட்டது போல் ஒட்டிக் கொண்டாள். திலகம் எழுந்தாள்; உடம்பெல்லாம் ஈரம். வியர்வையினாலா ரத்தத்தினாலா என்று சொல்லச் சமயமில்லை. உடம்பு பூரா வலித்தது. இருந்தும் ஆவேசம் நிரம்பிய சொற்ப சக்தி பாக்கி இருந்தது அவளிடம். தன் பிள்ளையைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு ஓடினாள்.

‘விட்டிருங்க முதலாளி! அய்யோ! விட்டிருங்க முதலாளி! இனிமே செய்யல. ஓடிப் போயிர்றேன். விட்டுருங்க'' என்று காதர் அபசுரமாகக் கதறினான்.

''ஏண்டா என் கையில ராங்க் பண்றியாடா நீ.... மாதர்...'' பொறியில் அடைபட்ட எலி போல் காதரின் கண்கள் பளபளத்தன. ப்ரேமின் ஒவ்வொரு சலனத்தையும் தற்காப்பு உணர்ச்சியுடன் உந்துதலில் கவனித்தான். வாய் தன்பாட்டுக்கு முதலாளி முதலாளி என்று அலறிக் கொண்டிருந்தது. ப்ரேம் இன்னும் அவனை அடிக்க ஆரம்பிக்கவில்லை. அதற்கு ஏற்ற ஆயுதத்தைத் தேடிக் கொண்டிருந்தான்; காதர் எதிர் மூலையில் ஒண்டியிருந்தான். ப்ரேம் அருகே வந்தால் மற்றொரு மூலைக்கு ஓடினான். ப்ரேமுக்கு அவனைப் பிடிப்பது சலிப்பாக இருந்தது. அவன் கோபம் அதிகரித்தது. காதர் அறைக்குள் மின் வேகத்தில் ஓடினான். தப்பிக்க வழியில்லை. எல்லாம் அடைத்திருந்தது. அருகே ப்ரேம் நிற்கிறான். கைக்கு அகப்படாத ஆத்திரத்தில் ப்ரேம் முகம் சிவந்திருந்தது. அறையைச் சுற்றிப் பார்த்தான். போட்டோப் படங்கள், சீசாக்கள், அலமாரி நிறையப் பீங்கான் சாதனங்கள். காத்ரெஜ். எதை எடுத்து அடிப்பது? ஒரு பெரிய சீசாவைக் காதரின் மேல் எறிந்தான். பையன் கலபமாக ஒதுங்கிக் கொள்ள 'சிலுங்' என்று அது உடைந்தது.

''வேண்டாங்க முதலாளி. சின்னப் பையனுங்க! அய்யய்யோ அய்யய்யோ! உட்டுடுங்க! அடிக்காதீங்க!''

ப்ரேமுக்கு ஆயுதம் கிடைத்து விட்டது. சுவரில் ஆணி அடித்து மாட்டியிருந்த டென்னிஸ் மட்டை. டென்னிஸ் ஆட வேண்டும் என்று ஆசை ஏற்பட்டு வாங்கி வைத்து, எப்போதோ கோர்ட் அமைத்து அதில் ஒரு செட்டுக் கூட ஆடவில்லை.

இப்போது பயன்படப் போகிறது.

நல்ல வலுவான ஸ்லேஸ் ராக்கெட். எடுத்தான். இப்போது ப்ரேமுக்கு வீச்சுப் பிரதேசம் அதிகரித்து விட்டது. காதரால் சுற்றிச் சுற்றிக்கூட ஓட முடியவில்லை. வச

மாக ஒரு மூலையில் மாட்டிக் கொண்டு விட்டான்.

'ஷ்ஷ்ஷ்' என்று காற்றைக் கிழித்துக் கொண்டு ராக்கெட் அவன் மண்டையில் வெடிக்கக் காதரின் மண்டைக்குள் இலவச வைரங்கள் தெறித்தன. உள்ளே ஜாஜ்வல்யமாக வலித்தது. ஒளிப் பிழம்பாக நோவு புறப்பட்டு உணர்வுகள் சகலத்தையும் தாக்கியது. ''அய்யோ! செத்தேன்!'' என்று அப்படியே விழுந்தான்.

இப்போது காதருக்குக் கெஞ்சிக் கேட்பதற்குத் திராணி இல்லை.

''ஏண்டா டேய்! நம்கைல விளையாட்றியா? நம் கைலயே ராங் பண்றியா? நான் பாத்து வைச்ச பொண்ணைத் தப்பிச்சக்க விட்டியா? ஏண்ட டேய் நமக்ஹராம் லாலா!'' ப்ரேமின் கோபம் சாக்கடை வழிந்து வார்த்தைகளுக்கு மாறியது.

அந்தக் கோபம் வடிவதற்குக் காதரை மேலும் மேலும் மேலும் இன்னும் இன்னும் அடித்தான்.

அந்தச் சிறுவன் மிச்சமிருந்த ரிஃப்ளெக்ஸ் செயல்பாடுகளில் உடம்பை நத்தைபோல் சுருக்கிக்கொள்ள,

மனித உடலுக்கு ஓர் எல்லைக்கு மேல் வலி ஏற்பட்டால் ட்ரௌமா என்கிற ஸ்திதி ஏற்பட்டு மூளை அத்தனை நினைவுகளையும் இழக்க வைக்கிறது...

காதருக்குள் மிகச் சிவப்பாக ரத்த நிறத்தில் விசித்திரக் கோலங்கள். பஸ் ஸ்டாண்டில் அப்பா அப்பா அம்மா அம்மா என்று ரத்த நிற மனிதர்களின் நடுவே திரிந்தான். மனோகரி பேசினான். 'சரியாப்போயிடும் பாரு! எனக்கே சரியாப் போய்டுச்சு! இன்னும் கொஞ்சம் வலிக்கும் காதரு! அதுக்கப்புறம் சரியாப் போய்டும்!'

ஏன் இன்னும் அடிச்சுக்கிட்டே இருக்காங்க?

ஏன் தெரியலே.

'காதரு! என் செல்வமே! நான் உன்னை வெச்சுக் காப்பாத்திச் சோறு போடறண்டா! என் கண்ணுட்டம் நீ என்னைக் காப்பாத்தின பாரு!'

'பாருங்கக்கா! சும்மா போட்டு அடிக்கிறான் சேட்டு! எனக்கு அப்பா அம்மா இருந்தா அடிக்க மாட்டான்ல? அத பாரு எவ்ள ரத்தம்! வீடு பூரா, வீதி பூரா!'

'சரியாய்ப் போய்டும் காதர்!'

காதர் முழுவதும் நினைவிழந்து கருநீல இருட்டில் நீந்தினான்.

ப்ரேம் அவனை மார்பில் மிதிக்கக் காலைத் தூக்கியபோது கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. போய்த் திறந்தான்.

''என்ன தாஸ்! அந்தப் பொண்ணு எங்க? புட்ச்சியா?''

''இல்லிங்க. இருட்ல தப்ச்சு ஓடிருச்சு!''

''சட்! எல்லாம் இந்தப் பயலால்தான்'' என்று கீழே கிடந்த காதரை மிதித்தான்.

தாஸ் கீழே பார்த்தான். சிறுவனின் ரத்தம் ஒரு சிறிய சோம்பேறி ஓடையாக வடிந்து மேற் செல்லலாமா உறைந்து போகலாமா என்று தயங்கிக் கொண்டிருந்தது.

''அடடா! நல்லா அடிச்சிட்டீங்க!''

''அடிக்கிறதா? சாவு பண்ணனும்! டெத் ஆய்ரணும்!''

தாஸ் காதர் அருகில் அலட்சியமாக நடந்து வந்து அவனைத் திருப்பினான். கண்கள் மூடியிருந்தன. பாலகன். சின்னதாக மூக்கு. சமீபத்தில் க்ராப் செய்யப்பட்ட தலை. (ப்ரேம் கொடுத்த ஐந்து ரூபாயில் ஒரு தடவை சலூன் போய்விட்டு வந்திருக்கிறான்.) காதரைக் கறுப்பு என்று சொல்ல முடியாது. பொன் போல வறுக்கப்பட்ட காப்பி நிறம். திறந்த வாயில் அரிசிப் பற்கள் தெரிந்தன. சமீபத்தில் வாங்கின புதுச் சட்டையில் நிறைய ரத்தம் சிதறியிருந்தது. டிரௌசர் பாக்கெட்டுக்குள் துருத்திக் கொண்டு அந்த மஞ்சள் பந்து.

தாஸ் அவன் மூக்கில் விரல் வைத்துப் பார்த்தான்.

''செத்துட்டானா?''

''தெரியலிங்க. நல்ல அடி.. என்ன செய்யறது!''

''என்னவோ செய்யி! லாலா ஒண்ணுக்கும் லாயக்கில்ல நீ! பேக்கார்! ஒதிக்கணும் உங்கள! ஒரு பொம்பளையைப் பிடிக்கத் தெரி



யல? கட்டி வைக்க ஒதிக்கறும்!'' ப்ரேமின் கைகள் நடுநடுங்க சிகரெட் பற்ற வைக்க முடியாமல் தவித்தான். தாஸ் அருகே வந்து ஸ்திரமான கைகளால் பற்ற வைத்தான். தாஸ் அவனைப் பார்த்த பார்வையில் எச்சரிக்கை இருந்தது. மை காட்! சோக்ராவை ஜாஸ்தி அடித்து விட்டமா? இறந்து போய் விட்டாளு என்ன? இருக்காது. இருக்காது!

''மூச்சு இருக்குதா பாரு!''

''தெரியலிங்க! சரியாத் தெரியல!''

''ஒண்ணு ரெண்டு தட்டுத் தட்னேன். அவ்ளதான்! சாவலே! தாஸ் இப்ப என்ன செய்றது?''

தாஸ் மௌனமாக மார்பில் காது வைத்துக் கேட்டான். காதரின் இதயம் எங்கோ எட்டு மைல் தூரத்தில் துடிப்பது கேட்டது.

''இதபார், என்ன பண்றே, தூக்கிட்டு நம்ம கார் டிக்கிலே போட்ரு இல்லே, பின் சீட்ல வை! நேரே ஹாஸ்பிட்டல்லே உட்ரு? பாதையில கெடந்தான் சொல்லிரு என்ன''

''இல்லிங்க; போலீஸ் கேஸ்னு நம்மை விடமாட்டாங்க எசமான்!''

''பின்னே என்னதான் செய்யறது?''

தாஸ் காதரைத் தூக்கிக் கொண்டு காரை நோக்கி நடந்தான். பின்னால் ப்ரேம் தயங்குவதைக் கண்டு ''வாங்க'' என்றான்;

திலகம் மகளுடன் காங்கிர.. ரோட்டில் நடந்தாள். முள் குத்தின கால் வலித்தது. மகளின் கனம் உடம்பெல்லாம் பரவியிருந்தது. தனியே நடக்க விட்டால் குழந்தை தொய்ந்தது. எங்கே போகிறேன்? ஊரை விட்டு வெளியிலா? ஊரை நோக்கியா? யாரைப் பார்ப்பது? ராத்திரி எங்கு தங்குவது? எல்லாம் குழப்பம். இருந்தும் வைராக்கியமாக நடந்தாள். மார்பில் முத்து முத்தாக வியர்வை நனைந்தது. முகத்தை அடிக்கடி துடைத்துக் கொண்டாள்.

'பாளாப்போனவரு! குடிச்சுப்பிட்டு செயில் போய்க் குந்திட்டாரு! நாந்தான் பொணு தண்ணிக்கு அலமோதிக்கிட்டுக் கெடக்கிறேன்!' என்று கணவனைத்தான் திட்டத் தோன்றியது. அதே சமயம் அவனைப் பற்றிக் கவலையாகவும் இருந்தது. பெண் சன்மம் கொஞ்சம் அளகாக இருந்ததினால் ஏற்பட்ட ஆபத்தை நினைத்து முகத்தையெல்லாம் கீறிக் கொள்ள வேண்டும் போலிருந்தது. கணவன் எங்கிருக்கிறான் என்பது தெரியவில்லை. இந்தச் சனங்கள் அவனை விடுவித்ததாச் சொன்னதெல்லாம் பாசாங்கு! அந்தப் பிள்ளை காதரு என்ன ஆகியிருக்கும்? ஏன் அவன் தன் கூட ஓடிவரவில்லை என்பதும் கவலை. கைக்காசைப் புடவைத் தலைப்பில் முடிந்து வைத்திருந்தாள். நிறைய பஸ்கள் மெயின் ரோட்டில் சென்றவண்ணம் இருந்தன. இது எந்த இடம்? ஒரு மரத்தடியில் நாலைந்து பேர் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பெண் பிள்ளையைப் பார்த்ததும் ஆறுதல் பெற்று நின்றாள்.

''அம்மா! சிங்காநல்லூர் போவுற பஸ்ஸு இங்கட்டாலே வருமுங்களா?''

''இல்லேம்மா! அதுக்கு டவுன் பஸ் டாண்டுக்குப் போகணும்.''

''அது எந்தப் பொறம்?''

''நம்பர் பார்த்து ஏறணும். ஏறுவியா?''

''எனக்கு ஊரு தெரியாதுங்க. ஊமைப் புள்ளையை வைச்சுக்கிட்டு அலையறேனுங்க! புருசன் செயிலுக்குப் போயிட்டாரு. என்ன செய்வேன்! ஏது செய்வேன்! பவுனாத்தா! மாராத்தா! கொண்டாத்தா!'' என்று குந்தி உட்கார்ந்து கொண்டு அழ ஆரம்பித்தாள்.

''ஏய் கொரளம்! எளுந்திரு! அழுவாதே!'' என்றான் ஒருவன்.

''இங்கேயே என்கூட நின்னுக்க. நான் வழிகாட்டறேன். அழுவாதே!'' என்றாள் அந்தப் பெண்;

பஸ் வந்து, அதில் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு இருவரும் ஏறிக்கொள்ள, அது புறப்பட. அதனுள் மெலிதான மஞ்சள் வெளிச்சத்தில் தன் உடம்பில் பல இடங்களில் உறைந்த ரத்தக் கீறல்கள் இருப்

---

நீர்மூழ்கிக் கப்பலொன்று நீரின் மேல் மட்டத்துக்கு வரும்போது ரேடார் இல்லாத மற்றொரு கப்பலுடன் மோதிப் பழுதடைந்து தண்ணீருக்குக் கீழே (1450 அடி) போய்விடுகிறது. கடலடியில் உள்ள ஒரு மலை மீது விழுந்த அதனைக் காப்பாற்ற முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன. திடீரென ஏற்படும் பூகம்பம் கடலின் அடியிலுள்ள நீர்மூழ்கிக் கப்பலின் மேல் தளத்தில் மண்ணைச் சேர்த்து விடுகிறது. பிறகு கப்பலில் புகுந்துள்ள தண்ணீரை வெளியேற்ற முயலும்போது இடைக் கதவு உடைகிறது. கப்பல் ஒருவாறு நகரும்போது பாறையொன்று அதனைத் தடுத்து நிறுத்துகிறது. பாறையை வெடிகுண்டால் தகர்த்துக் கப்பலைச் சரியான நிலைக்கு நகர்த்துகிறார்கள். இது போன்ற மயிர்க் கூச்செறியும் பல சம்பவங்களை யூனிவர்ஸல் பிக்சர்ஸார் விரைவில் வெளியிடப்போகும் ''கிரேவேடி டௌன்'' படத்தில் காணலாம். —டி.எம்.ஆர்.




படம்: மழையல்ல; கடல்நீர் உட்புகுந்துவிட்டது நீர்மூழ்கிக் கப்பலுக்குள்!

பதைக் கவனித்தாள். இது முள் வேலி இது நகக் கீறல்...

பைசா கொடுக்கும்போது நோட்டின் ஓரத்தில் ரத்தம் இருந்தது.

கண்டக்டர், "என்னம்மா கீழே விழுந் திட்டியா" என்றான். மறுபடியும் மடை திறந் தாற்போல் அழுதாள்.

"என்ன கஷ்ட காலமோ? புருஷன் அடிச் சானே! வேளாண்மைப் பல்கலைக் கழகம் யாராவது எறங்கணுமா?"

தன் பிள்ளையை மடியில் போட்டுத் தட் டிக்கொண்டே சன்னலில் சாய்ந்து வெளியே பார்த்தாள். பௌர்ணமிக்குப் பின் தினங்கள் போல் இப்போதுதான் இருட்டை விலக்கி விட்டு நிலா—வெளி வரலாமா என்று யோசித் துக் கொண்டிருந்தது. பஸ்ஸின் ஜன்னல் நிழல் தார் சாலையில் பிடிவாதமாகத் தொடர 'நான் பிறந்ததைச் சொல்லவா, வாழ்ந்த தைச் சொல்லவா வாழ்க்கைப்பட்டதையா?' என்று ஏதேதோ தனக்குள் முணு முணுத் துக் கொண்டு காலையிலிருந்து சேர்ந்து வைத்திருந்த அலுப்பில் தூங்கிவிட்டாள்.

பஸ் நின்றது.

"ஸ்டாப்பிங் இல்லாம நிறுத்தாதிங் கண்ணே! எத்தனை தரம் சொல்லியிருக்கேன்!"

"ஸ்டாப்பிங் இல்லேடா. ரோட்டிலே பாரு!"

ஹெட் லைட் வெளிச்சத்தில் சாலைக்குச் சற்று இடப்புறமாக ஒரு சின்னத் துணி மூட்டை போல் கிடந்தது.

டிரைவர் குதித்து இறங்கி அருகே சென்று கவனித்தான்.

"அட! சின்னப் பயல் மாதிரியல்ல தெரி யுது!"

"நாகப்பன்! ஓட்டுங்க! நமக்கேன் வம்பு!"

"நல்லா அடிபட்டிருக்கானும்ல!"

"நாகப்பன்! வேண்டாங்க! யாரோ பயலை அடிச்சுப் போட்டிருக்காங்க. போலீஸ் கேசா யிரும்! ஏற்கனவே அரை மணி லேட்டு! இவனைத் தூக்கிகிட்டு எங்கே கொண்டு போறதா உத்தேசம்?"

"போறபோக்கிலே போலீஸ் ஸ்டேஷன்லே ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போயிரலாம். வழில கிடக்குதுன்னு! அதாஞ்சரி!"

"சின்னப்பையன்யா!"

"நாகப்பன்! வம்பு வேண்டாம்! அப் புறம் கோர்ட்டு, கேஸு!...."

எதிரே ஒரு போலீஸ் ஜீப் வந்து அவர்கள் அருகே நின்றது.

"வாரிக்காரங்க ரிப்போர்ட் பண்ணுங்க. ஒரு சின்னப் பையன் அடிபட்டுக் கிடக்கா னும்ல...."

"அங்கேதாங்க! நல்ல வேளை நீங்க வந் துட்டீங்க! நாங்களே எடுத்துட்டு வர்றதா இருந்தோம்!"

பஸ் கிளம்பியது.

இன்ஸ்பெக்டர் காதரின் அருகே சென்று குனிந்து பார்த்தார்.

திலகம் இன்னும் தூங்கிக் கொண் டிருந்தாள்.

**ரா**கவாச்சாரி கண்ணாடியைத் துடைத் துக்கொண்டு நிமிர்ந்தார். "நான் போய் அந்தக் கிராமத்தில் விசாரிச்சுட்டு வந்



"இந்தியாவிலேயே பிரசித்தமான மூன்று port களின் பெயர் சொல்லு!"

"எக்ஸ்போர்ட், இம்போர்ட், பாஸ்போர்ட்!"

— ஜீ. நடராஜ்

❊❊❊❊❊❊❊-❊❊❊❊❊❊❊❊❊

துட்டேன். எல்லாம் சரிபண்ணிட்டு வந்துட் டேன். அந்த நிலம் உன்னோடதுதான்!"

"எப்படி அய்ங்கார்?"

"ரிக்கார்ட்ஸ் சரியா யில்லேன்னு சொல் லிட்டாப் போச்சு!"

"அப்படி யார் சொல்றது?"

"வில்லேஜ்ல."

"அவன் பத்திரம் வைச்சிருக்கான் சொல் றது"

"வெச்சிருக்கட்டுமே! பத்திரத்திலே என்ன எழுதியிருக்குது சர்வே நம்பர்தானே? அது ஒரே குழப்பமா இருக்கும். அப்பவும் கலபமா உன் நிலம் இது இல்லேடா. இன் னும் ஒரு மைல் தள்ளி இருக்குன்னு சொல் லிடலாம். அவன்கிட்ட இருந்து நிலத்தைப் பிடுங்கவே வேண்டாம். எல்லாம் ஏற்பாடு செஞ்சாச்சு."

"எவ்வளவு ரூபா ஆச்சு?"

"அதைப் பத்தி நீ ஏன் கவலைப்படறே? உங்கப்பன் கிட்டே வாங்கிக்கிறேன்."

"அப்பா இந்த விவகாரமே வேண்டாம்னு சொல்றாரு."

"என்ன இது! ரத்தக் கறை!"

"பென்சில் சீவிக்கிட்டிருந்தேன். ப்ளேடு வெட்டிருச்சு!"

"ப்ளேடு எல்லாம் எதுக்கு உபயோகிக் கிறே! தேவையே இல்லை. எல்லாத்தையும் ஜெண்டிலா செய்யணும் தெரியுதா?"

"உங்கிட்டத்தான் கத்துக்கணும் அய்ங் கார்!"

"**ம**ல்ட்டிப்பிள் ஃப்ராக்சர்ஸ். மார்பெ லும்பு உடைஞ்சிருக்கு. மண்டையிலே ஒரு விரிசல். ஏகப்பட்ட ரத்த சேதம். கன்கஷன். ஆழமான மயக்கத்தில் இருக்கான். யாரய்யா பையன்?"

"தெரியலிங்க! செத்துக்கித்து வெச்சிரு வானு?" என்றார் இன்ஸ்பெக்டர்.

"அப்படித்தான் தெரியுது!"

(தொடரும்)

அம்மா உங்கள் கவனிப்பு கரை கடந்தது.

# ஊட்டும் கரம் அறியுமே— அவன் வயிற்றுக்கு உன்னதம் எதுவென்று.



everest/79/PP/194 tam

உங்கள் கவனம் அடிக்கடி
தேவைப்படுகிறது
குழந்தைக்கு. அவனை சீராட்டி
வளர்க்க நீங்கள் எதனையும்
செய்வீர்கள்: குளிப்பாட்டி,
உடை உடுத்தி, உணவு
ஊட்டி, உடல் நலம் பேணிக்
காப்பதில் நீங்கள் எடுத்துக்
கொள்ளும் கவனம் தான்
எவ்வளவு?

கருத்துள்ள அதே கவனம்
பளிச்சிடுமே நீங்கள்
அவனுக்கு தேர்ந்தெடுக்கும்
பிஸ்கட்டிலும். திண்ணம்
அதுவே, தீவிர சுகாதார
முறையில் கைபடாத் தூய்மை-
யோடு தயாரித்த பிஸ்கட்.

நீங்கள் அவனுக்கு ஊட்டும்
உணவிலே உள்ளதைப்
போன்ற நிகரான ஊட்டச்
சத்து அதிலே: பால்,
சர்க்கரை, க்ளூகோஸ்,
செரிப்பதற்கு எளிதாக
இழைய அரைத்த கோதுமை.

கண்மணிக்கென்று
உங்கள் கரம் தொடும் அந்த
பிஸ்கட், கரகரப்பானது,
சுவை மிக்கது. கொரித்து,
ரசித்து மகிழ்வானே உங்கள்
குழந்தை.

எண்ணிப் பாருங்கள்:
7, உலக விருதுகளை வென்ற,
இந்தியாவின் அதி நவீன
பிஸ்கட் தயாரிப்பாளர்களின்
படைப்பை.

பாப்பா படம் போட்ட
இந்த வண்ணமய உறையை
பார்த்து வாங்குங்கள்.




7, உலக விருதுகளை வென்றது.

**பார்லே**
**க்ளூகோ**

**உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.**



# ஜெல்லோகோ-ஏ-மந்து

'விஜேதானந்த்'

அந்த வண்ணக் கலவைகளாலான மாலை நேரம் உலகுக்கு அழகூட்டிக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது நேரம் சென்றால் அந்த இயற்கை அழகின் இதமான சூழ்நிலையை இருளின் பசி நாக்குகள் கவ்விப் பிடித்துக் கொள்ளும். அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுவன் பள்ளி முடித்து வீடு திரும்பிக்கொண்டிருந்தான்.

அவனுடைய அன்னை பெற்றுப் போட்ட ஐந்து ஜீவன்களில் இரண்டாமவன். வறுமைச் சேற்றில் அமிழ்ந்து தத்தளித்துக் கொண்டிருந்த போதிலும், அவனுடைய முக அழகு முழுவதுமாக வழிந்து விடாமல் மிச்சம் வைத்துக் கொண்டிருந்தது. அறிவுக் கண்களின் ஜீவ ஒளி அந்த முகத்தில் தெரிந்தது.

நடந்து வந்து கொண்டிருக்கையில் எழிலோடு காட்சியளித்த சில கட்டிடங்கள் பார்வையில் தரிசனம் தந்து அவனை ஏங்க வைத்தன.

ஓரிடத்தில் அவன் நின்றான். ஓர் இரண்டு மாடிக் கட்டடத்தின் அமைப்பும் அழகும் அவன் கால்களைத் தரையோடு சேர்த்துக் கட்டிப் போட்டன. பார்வை அந்தக் கட்டடத்தை ஆராய்ந்து கொண்டிருந்தபோது உள்ளம் அவனது வீட்டை வரை படம் போட்டுக் காட்டிக் கொண்டிருந்தது.

நாட்டு ஓடுகள் வேய்ந்த ஒரு சிறு வீடு. ஓடுகள் வேயப்பட்டுக் குறைந்தது ஐந்து ஆண்டுகளாவது ஆகியிருக்கும்.

ஏழாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த அவன் பெயர் சரவணன். பாடங்களைப் படிக்கும் நேரம் போக, வீட்டு வேலைகளில் ஈடுபடும் நேரம் போக, விளையாடும் நேரம் போக, ஓய்வாய் இருக்கும் சில மணித் துளிகளில் சில ஆசைகளை நெஞ்சில் அணைத்துக் கொண்டு சீராட்டுவான்.

ஒரு பெரிய வீடு. எல்லா வசதிகளும் நிரம்பிய வீடு. எதுவுமே தட்டிப் போகாமல் நிறைந்து கிடக்கும் வீடு. பளபளப்பான உடைகள், சொகுசான கட்டில், மெத்தென்ற பஞ்சு மெத்தை, படிக்க ஒரு மேசை, அந்த மேசையில் வளைந்து கொடுத்து அவனுக்கு மனமுவந்து உதவும் மின் விளக்கு. இப்படி இன்னும் எவ்வளவோ.

அவை—வெறும் ஆசைகளாக மட்டுமல்லாமல் ஏக்கங்களாக உருமாறிக் கொண்டு வருகையில், ஒரு நாள்—

சுமித்ரா வந்தாள்.

நீலாவுக்கு நெஞ்சில் குளுமை பரவிற்று.

''எவ்வளவு நாட்களுக்குப் பிறகு பார்க்கிறோம்....!''

மகிழ்ச்சி கண்களில் முத்தாகத் திரளச் சுமித்ராவைக் கட்டிக் கொண்டாள்.

மாறுபட்ட கோணத்தோடு சுமித்ரா அவனையும், அந்த வீட்டுச் சுற்றுப்புறச் சூழ்நிலைகளையும் பார்த்தாள். நீலாவைச் சுற்றி நிற்கும் சவலைக் குழந்தைகளைப் பார்த்தாள். அந்தப் பார்வையிலேயே அவளுக்கு எல்லாம் புரிந்தது.

புரிந்ததைத் தனக்குள் மூடி வைத்துக் கொண்டு சற்று நேரம் தான் பிறந்து வளர்ந்த அந்த ஊருக்கு வந்த காரணத்தையும், தன் குடும்பத்தைப் பற்றியும் தான் தற்போது மகளிர் சேவா சங்கத்தின் செயலாளராகச் சென்னையில் இருப்பது பற்றியும், அந்தச் சங்கத்தின் அலுவல்களைப் பற்றியும் எடுத்துச் சொன்னாள்.

நீலா அவளுடைய பேச்சுக்குச் சற்று ஓய்வு தந்துவிட்டுக் காப்பி கலந்து வர உள்ளே சென்ற அந்தக் குறுகிய நேரத்தில் குழந்தைகளோடு பேசினாள்.

அப்போது சரவணன் உள்ளே வந்துகொண்டிருந்தான். அவளுக்கு அவன் சற்று வித்தியாசமானவனாகத் தெரிந்தான்.

'இந்தப் புது மனுஷி யார்?' என்று தெரிந்து கொள்ள விரும்புபவன் போல் தன்னையே அவன் உற்று நோக்குவதைக் கண்டபோது, சுமித்ரா அவனுடைய பெயர், படிப்பு முதலியவற்றைப் பற்றிக் கேட்டாள். அவன் பதில் சொன்ன விதம் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

''என்னோட மெட்ராஸ் வறியா? அங்கேயே படிக்கலாம். உனக்கு நல்ல நல்ல துணிகளெல்லாம் எடுத்துத் தரேன். டியூஷன் வைக்கிறேன். ஊரைச் சுற்றிக் காட்டுகிறேன்....''

அந்த வாக்குறுதிகளில் அவன் மயங்கிக் கொண்டிருந்த வேளையில் நீலா காப்பிக் குவளையுடன் வந்தாள்.

'குழந்தைகள் ஆண்டில் ஓர் ஆதரவற்ற குழந்தைக்கு உதவுவது என்ற உறுதிமொழி மகளிர் சேவா சங்க உறுப்பினர்களில் வசதி படைத்தவர்கள் எடுத்துக் கொண்டால் சிறப்பாக இருக்கும்' என்று எவரோ முன்

மொழிந்த தீர்மானம் சுமித்ராவை அப்படிப் பேச வைத்தது. ஆதரவற்ற என்று சொல்லும்போது, அனாதை என்றுதான் பொருள் கொள்ள வேண்டுமா என்ன?

போதிய வருமானம் இல்லாத அந்தப் பெரிய குடும்பத்தின் வாரிசுகள் எலும்பும் தோலுமாய் மெலிந்து தரித்திரத்தை அப்பட்டமாகக் காட்டிக் கொண்டிருந்ததைக் கண்ணுற்றபோது சுமித்ராவுக்கு அந்த நினைப்பு வந்தது.

''இவனை என்னோடு அனுப்பி வையேன். அங்கே இருந்து படிக்கட்டும்...''

சுமித்ராவின் அந்த வேண்டுகோளின் பின்னணியில் இன்னொரு விஷயமும் திரை மூடிக் கிடந்தது. அது நீலாவுக்குப் புரியாமலில்லை. சுமித்ராவின் கண்ணே அதைக் காட்டிக் கொடுத்தன.

சுமித்ராவுக்குக் குழந்தை இல்லை.

'அம்மா...' என்று தன்னை அழைக்க ஒரு மழலைச் செல்வம் சீக்கிரம் பிறக்காதா என்று அவள் ஏங்கிய காலம் உண்டு. அந்தக் காலக் கணக்கு நீடித்துக் கொண்டுபோகுமே தவிர, அவளது எண்ணம் நிறைவேற வாய்ப்பில்லை என்று உதட்டைச் சுழித்து அநுதாபத்தோடு கூறி விட்டாள் டாக்டர் நித்யா.

வாரிசுக்காக மறு மணம் செய்துகொள்ளும்படி கணவனை அவள் தன் உள்ளப்பூர்வமான சம்மதத்தோடு கேட்டுக் கொண்டபோது, 'எனக்கு நீ குழந்தையாய், உனக்கு நான் குழந்தையாய் இருப்போம்' என்று அவர் சிரித்துக் கொண்டே சொன்னதை தனிமையில் இருக்கையில் நினைந்து நினைந்து உருகுவாள்.

'தாய்ப் பாசத்தின் துடிப்பை நானும் உணர எனக்கு ஒரு செயற்கையான வழியை யாவது அமைத்துக் கொடு...' என்று சுமித்ரா தன்னிடம் மன்றாடுவது போலிருந்தது.

தன்னுடன் அந்தரங்கமாகப் பழகியவளின் அந்தரங்கத்தில் புதைந்து கிடக்கும் அபிலாஷைக்குத் தாற்காலிகமாகவாவது இணங்கிப் போவது தனது கடமை என்று நினைத்துக் கொண்டாள்.

''அவர் வரட்டும்....'' என்று சாதகமான முடிவுக்கு ஒரு தொடக்கம் போல் அவள் சொன்னபோது, அந்தச் சொற்கள் தேனாக இனித்துச் சுமித்ராவின் மனத்துக்குச் சுவை சேர்த்தன.

அந்தப் பெரிய மாடி வீட்டினுள் சுமித்ராவுடன் அடியெடுத்து வைத்தான் சரவணன்.

தன் கனவின் பிரதிபலிப்பான அந்த நிஜத்தைப் புத்துணர்வோடு அனுபவிக்கத் தொடங்கினாள்.

பாஸ்கரனுக்கும் அவனைப் பிடித்திருந்தது. அவனை அழைத்துத் தம் அருகே சோபாவில் அமர்த்திக் கொண்டார்.



இவ்வளவு நாட்களும் அமைதியான உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்த அந்த வீட்டில், குத்து விளக்கின் சுடராக வெளிச்சம் பரவி வீட்டை நிறைத்துக் கொண்டு மனசையும் நிறைத்துக் கொண்டு, அந்த அமைதியை விரட்டிவிட்டு ஆனந்தக் கூத்து ஆடத் தொடங்கிற்று.

சரவணன் பள்ளியில் சேர்ந்தான்.

சீருடையை அணிந்து கொண்டு சுமித்ராவுக்கும், பாஸ்கரனுக்கும் 'டாடா' காட்டிவிட்டுத் தயாராகக் காத்திருக்கும் சைக்கிள் ரிக்ஷாவில் ஏறிக் கொள்வான். பாடப் புத்தகங்களை உள்ளடக்கியிருக்கும் பெட்டி பக்கத்தில் சாதுவாகக் கிடக்கும்.

புதிய உடைகள் கணக்கில்லாமல் சேர்ந்தன. புதிய சூழ்நிலை அவன் உள்ளத்திலும், உடலிலும் பெரும் மாற்றத்தை விளைவித்திருந்தது. ஊட்டமான உணவுகளின் செளிமானத்தில் புதுப் பொலிவு அவனிடம் கொஞ்சம் கொஞ்சமாக நட்புரிமையோடு பழக ஆரம்பித்திருந்தது.

நீலமேக சியாமளனாக அவனைக் கருதி, 'கண்ணா!....' என்றே செல்லப் பெயரிட்டுச் சுமித்ரா அவனை அழைத்தாள். பாஸ்கரனும் தான்.

அந்த நிறைவோடு நீலாவுக்கு விவரமாகக் கடிதம் எழுதி, ''அவனைப் பற்றிய கவலை இனி உனக்கு வேண்டாம். உரிமையோடு சொல்கிறேன். இனி அவன் எங்கள் பிள்ளை!'' என்று முடித்திருந்தாள்.

கடிதத்தை முடித்துத் தன் கையெழுத்தை அவள் இட்டிருந்த இடத்தில் மகிழ்ச்சி கலந்த நன்றிப் பெருக்கு இரண்டு சொட்டுகளாய் விழுந்து இரண்டு எழுத்துக்களை இலேசாக அசைத்துக் காட்டியிருந்தது.

வந்த புதிதில் சுமித்ராவையும், பாஸ்கரனையும் எப்படி அழைப்பது என்ற குழப்பத்தோடும், கூச்சத்தோடும் காணப்பட்டவன் போகப் போக நிலை தெரிந்து, அவர்கள் அவன்மீது காட்டிய அன்பை உள்ளடக்கிய பாசத்தின் மொழி புரிந்து, அவளை 'அம்மா' என்றும், அவரை 'அப்பா' என்றும் ஆத்மார்த்தமாக அழைக்க ஆரம்பித்தான்.

மகன்: வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கிறேன் அப்பா!

அப்பா: முன்னேறு. அதுக்கு என்னை என்ன பண்ணச் சொல்றே?

மகன்: சீக்கிரம் கல்யாணம் பண்ணி வையுங்கோ என்கிறேன்'

ஆர். கோபாலகிருஷ்ணன்



ஓ! அந்தச் சொற்களுக்காகத்தானே அவர்கள் இத்தனை நாட்களாகக் காத்திருந்தார்கள்?

முதன் முறையாக அவன் அவ்வாறு அழைத்தபோது, அவனைத் தன் நெஞ்சத்தோடு சேர்த்து அணைத்துக் கொண்டு அவனது அகன்ற நெற்றியில் முத்தமிட்டாள் சுமித்ரா.

காரிலும், சமயங்களில் டாக்ஸியிலும், அவனை அழைத்துச் சென்று சென்னையைச் சுற்றிக் காட்டினள். மெரினாவின் அகன்ற மணற் பரப்பில் கால்கள் அழுந்த அவன் மானசீகமாகப் பேசினான்.

அவன் கற்பனையில் கண்ட சொகுசுக் கட்டில், பஞ்சு மெத்தை, மேசை, வளைந்து கொடுத்து மனமுவந்து அவனுக்கு உதவும் மின் விளக்கு....

எதுவும் இனி மிச்சமில்லை.

எதுவும் தட்டிப் போகவில்லை.

ஆண்டுத் தேர்வு நெருங்கிக் கொண்டிருந்தது.

தேர்வுகள் முடிந்த பின் விடுமுறையில் அவனை ஊருக்கு அனுப்புவதா? இங்கேயே வைத்துக் கொள்வதா? இதை அவனுடைய முடிவுக்கே விட்டு விடுவதா? அவன் எந்த முடிவுக்கும் வராமல் இருந்தாலும், நீலா அவனை ஒருமுறை கண்ணால் பார்க்க வேண்டும் என்ற தனது ஆவலை வெளிப்படுத்தாமல் இருப்பாளா? அப்படி அவள் எழுதி அவன் புறப்பட்டுச் சென்றால், அந்த ஒரு மாத காலமே நெடிய வருடங்களாகத் தன்னுள் ஒரு பிரமையைத் தோற்றுவித்து, எதையோ இழந்து விட்டது போன்ற ஓர் அவல நிலைக்குத் தன்னைத் தள்ளி விடுமோ என்று பற்பல கேள்விகளும், நினைவை நிலைகுலைய வைக்கும் பதில்களுமாகத் திணறிக் கொண்டிருந்தாள் சுமித்ரா.

ஆனால் அவள் நினைத்தது போல், அவனைத் தன் கண்ணால் ஒரு முறை பார்க்க விரும்புவதாக நீலா எழுதவில்லை.

அவனுடைய நலத்துக்குத் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்திருந்தாள். அவன் நல்ல முறையில் தேர்வில் வெற்றி பெறுவான் என நம்பிக்கை தெரிவித்திருந்தாள்.

'அவனை அனுப்பி வை...'

அந்தச் சொற்களை மட்டும் கடிதத்தைப் பல முறை படித்தும் காணாமல் வியந்தாள் சுமித்ரா.

தேர்வுகள் முடிந்தன.

பாஸ்கரன் ஒரு மாதம் லீவு எடுத்துக் கொண்டார். ''ஊட்டிக்குப் போய் வருவோம்'' என்றார்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு அவர்கள் புறப்பட்டார்கள்.

ஊட்டியைப் பற்றி அவர் அவனுக்குத் தான் கேட்டு, உணர்ந்ததை, படித்து அறிந்ததை, பார்த்து ரசித்ததை எடுத்துச் சொன்னார்.

உதகமண்டலத்தின் பழைய பெயர் ஒத்தகமந்து என்பது. மந்து என்றால் தோடர்களின்

கிராமத்தைக் குறிக்கும். 1819ம் ஆண்டில் தோடர்களின் மூத்தவரான, 'பார்த்காய்' என்ற பணக்காரரின் வீட்டுக்கு முன்பாகப் பலிபீடமாக ஒற்றைக் கல் புதைகப்பட்டிருந்தது. அப்போது கோவை மாவட்டக் கலெக்டராக இருந்த ஜான் சல்லிவன் என்ற ஆங்கிலேயர் பார்த்காயைச் சந்தித்தார். அவருக்கு இந்தக் கல்லைச் சுட்டிக் காட்டி ''ஜெல்லோ கோ-ஏ-மந்து'' என்று கூறினாராம். அதாவது, 'இந்த ஒற்றைக் கல்லை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று அந்த நிலத்தைக் கலெக்டருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தாராம். அதையே அடிக்கல்லாக நாட்டி சல்லிவன் ஒரு பங்களாவைக் கற்களாலேயே கி.பி. 1823ல் கட்டி முடித்தார். அதுவே கலெக்டரின் கோடை வாசஸ்தலமாயிற்று. இக்கட்டடம் தற்போது அரசினர் கலைக் கல்லூரியாகத் திகழ்கிறது. இக் கட்டடம் அமைந்துள்ள குன்றுக்கு 'ஸ்டோன் ஹவுஸ் ஹில்' என்று பெயர். இந்த 'ஒற்றைக் கல் மந்து' என்ற பெயரே பின்னர் சிதைந்து ஒத்தகமந்து ஆகி பிறகு உதகமண்டலம் என்று மாறிவிட்டதாம். ஆங்கிலேயர் வாயில் 'ஊட்டகமண்ட்' ஆகிப் பின்னர் சுருங்கி ஊட்டி என்று பிரபலமாகிவிட்டது.

அவர் சொன்னது ஒரு கதையே போல் சுவாரசியமாக இருந்தது சரவணனுக்கு.

ஒரு மாசம் உல்லாசமாகக் கழித்து விட்டு ஊர் வந்து சேர்ந்தபோது, ஆண்டுத் தேர்வில் அவன் தேறியிருந்த செய்தி நல்ல வரவேற்பை அவனுக்கு அளித்தது. அவர்களுக்கும்தான்.

சுமித்ரா திருஷ்டி சுற்றிப் போட்டாள். 'படக் படக்' என்று நெட்டி முறித்தாள்.

''வெல்டன் மை பாய்!....''

பாஸ்கரன் அவனை உயரே தூக்கிக் கீழே இறக்கி அவன் வாயில் இனிப்பைத் திணித்தார்.

**ம**று நாள்.

ஊரிலிருந்து நீலா வந்து சேர்ந்தாள்.

உள்ளே நுழைந்ததுமே, ''இந்தாங்க, நான் பரீட்சையில் பாஸ் செய்து விட்டேன்'' என்று சாக்லெட் டப்பாவை அவள் முன் நீட்டினான் சரவணன்.

''மாதாந்திரத் தேர்வுகளில் எல்லாம் இவன்தான் முதலில் வந்தான்...'' சுமித்ரா பெருமிதம் பொங்கச் சொன்னாள்.

நீலா ஒரு சாக்லெட்டை எடுத்துக் கொண்டாள்.

அவன் சுமித்ராவின் பக்கத்தில் அவளுடைய இடுப்பில் தன் கைகளைச் சுற்றி வளைத்துக் கொண்டு பூரிப்போடு நின்றிருந்தான்:

''முகுந்த், முரளி, மீனு, நாகு எல்லாரும் பாஸ் பண்ணிட்டாங்களா?''

அவன் கேட்டான்.

''பாஸ் பண்ணிட்டாங்க!''

''அம்மா, நாம எல்லாரும் சாயங்காலம் பீச்சுக்குப் போயிட்டு வரலாமா?''

சுமித்ராவைப் பார்த்துக் கேட்டான்.

''போகலாம், கண்ணு...''

சிறிது நேரத்துக்குப் பிறகு, ''நீ போய்க் கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கு'' என்று



இன்ஸ்பெக்டர்: ஹோட்டலில் பெண்ணின் பாடி கிடப்பதாக தகவல் வந்ததே போய் பார்த்தியா?

போலீஸ்காரர்: பார்த்தேனுங்க. ஹோட்டலை விட்டு காலி பண்ணும் பொழுது யாரோ தவற விட்டுவிட்டுப் போயிட்டாங்க போலே இருக்கு.

-எஸ். சந்திரசேகர்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சுமித்ரா கூறியதும், சரவணன் அடுத்த அறையை நோக்கித் துள்ளி ஓடினான்.

அவனை நித்திரை வயப்படுத்தச் சொகுசான கட்டிலும், மெத்தென்ற பஞ்சு மெத்தையும் அங்கே காத்திருக்கின்றனவே!

''அவனை இங்கே நல்லபடி பார்த்ததிலே எனக்கு ரொம்பச் சந்தோஷம். ஆறு பேசிண்டிருந்த அரை மணி நேரத்தில என்னை ஒரு தடவை கூட அவன், 'அம்மா!'ன்னு கூப்பிடலே. அங்கே இருக்கும்போது, 'நீ....வா.. போ'ன்னுதான் சொல்லுவான். இங்கே, 'நீங்க... இந்தாங்க...'ன்னு மரியாதை கலந்து பேசறான்....''

நீலாவின் அந்தப் பேச்சினூடே இழையோடிய ஆதங்கம் சுமித்ராவைத் தாக்கிற்று.

நீலா தான் கொண்டு வந்திருந்த, மகனுக்காக விசேஷமாய்த் தயார் செய்திருந்த தின்பண்டங்களைப் பையிலிருந்து எடுத்து வைத்தாள்.

பிரயாணச் செலவுக்கும் பலகாரச் செலவுக்கும் அவள் கடன் வாங்கித்தான் இருப்பாள்?

''இவரோட அப்பா சொல்லித்தான் அனுப்பினார். அவன் மனசைக் கலைக்க இங்கே அழைச்சுண்டு வந்திடாதேன்னு சொன்னார். 'அதுக்குக் காரணம், அவன் மேலே உள்ள அக்கறை மட்டுமில்லே. உனக்காகவும் தான். நீ இன்னும் கொஞ்சம் நாட்கள் கழிச்சுப் போகலாமே'ன்னு சொன்னார். மனசு கிடந்து அடிச்சுண்டுது. புறப்பட்டு வந்துட்டேன். வந்து பார்த்ததுல ஒரு திருப்தி. நாளைக்கு நான் ஊருக்குக் கிளம்பறேன்...''

''ஒரு வாரம் இருந்துட்டுப் போகலாமே!''

''போகலாம்தான். ஆனா அங்கே அவரும், மத்த பிள்ளைங்களும் கஷ்டப் படுவாங்க. பொண்ணு சுமாராச் சமைக்கும். பையனுக்கும் தெரியும். இருந்தாலும், ஒரு நாள் ரெண்டு நாளுன்னாப் பரவாயில்லே. ஒரு வாரம் அவங்களாலே சமாளிக்க முடியாது.''

"வர முதல் தேதி பள்ளிக்கூடம் திறக்கிறாங்க. இல்லாட்டா இவனை உன்கூட அனுப்பி வைக்கலாம்..."

"அவனை அழைச்சுட்டுப் போக நான் வரலே!...."

நீலா சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு எதையோ ஒளித்து வைத்துக்கொண்டிருந்தது சுமித்ராவுக்குப் புரியாதா?

அன்பும், பாசமும், மென்மையான பெண்மையின் பரம்பரைச் சொத்துக்கள். உதடுகள் என்னதான் அலங்காரமாகவும், அழுத்தமாகவும் சொற்களைத் தந்தாலும் மன ஆழத்தில் புதைந்து கிடக்கும் அந்தப் பொக்கிஷங்களை அவ்வளவு எளிதில் எடுத்து வெளியே எறிந்துவிட முடியுமா என்ன

நீலா ஊருக்குப் புறப்பட்டாள்.

இரயில் நிலையம் வரை சென்றார்கள் சுமித்ராவும் சரவணனும்.

நீலா ஒரு கம்பார்ட்மெண்டின் ஜன்னல் ஓரத்தில் அமர்ந்திருக்கிறாள். பார்வை வெளியே இருக்கிறது. சரவணனைச் சுற்றிச் சுற்றி வருகிறது. பிளாட்பாரத்தில் புத்தகங்கள், காப்பி, தேநீர் விற்பவர்கள், உறவினர்கள், நண்பர்களை வழியனுப்ப வந்தவர்கள் அனைவரையும் பார்த்தபடி நின்றிருக்கிறான் அவன்.

'அவன் கண்கள் எப்போது என் பக்கம் திரும்பும்?'

"சரவணா!...."

மெல்லிய குரலில் அழைத்தாள்.

"உம்..."

சன்னலோரம் வந்து நின்றான்.

"போயிட்டு வரட்டுமா?"

"உம்...முகுந்த், முரளி, மீனா, நாகு எல்லாரையும் நல்லாப் படிக்கச் சொல்லுங்க..."

"சொல்றேன். அப்புறம்...?"

"ஒண்ணுமில்லே..."

சுமித்ரா அவனை ஏதோ கேட்க நினைத்தாள்;
நீலா ஏதோ சொல்ல நினைத்தாள்.

அதற்கு முன் அவன் நான் சொல்ல நினைத்ததைச் சொன்னான்.

"நான் நல்லாப் படிச்சு, பாஸ் பண்ணி வேலைக்குப் போயி, நிறையச் சம்பாதிச்சு உங்களுக்குப் பணம் அனுப்பறேன். அந்த ஓட்டு வீட்டை மாத்திடுங்க. அப்புறம் நான் இங்கே இருக்கிற மாதிரி ஒரு மாடி வீடா கட்டிடுங்க!...."

நீலாவுக்குத் திகைப்பாக இருந்தது.

'இந்தப் பிஞ்சு வயதில் இப்படி ஓர் ஆசையா? இந்த லட்சியத்துக்காகத்தான் அவன் இங்கே இருக்கிறானா?'

"மாடி வீடு கட்டினப்புறம் நீ அங்கே போயிடுவியா?"

சுமித்ரா வேடிக்கையாகக் கேட்டாள்... அதில் அவன் மன ஆழத்தைப் புரிந்து கொள்ளும் நோக்கமும் இருந்தது.

"மாட்டேன்... உங்களை விட்டு நான் போகவே மாட்டேன்..."

"உனக்கு நான் வேணுமா? அவங்க வேணுமா?..."

"அவங்க அடிக்கடி என்னை வந்து பார்ப்பாங்க. உங்களோடதான் எப்பவும் நான் இருப்பேன்."

சுவரிலிருந்து ஓர் ஒற்றைக் கல் தனியே விலகி விழுந்து விட்டது போல் இருந்தது நீலாவுக்கு. அப்புறம் அந்த ஒற்றைக் கல் தனியே விலகி அனாதையாக விழுந்துவிடவில்லை. வேறொரு மாளிகையில் அது பதிக்கப்பட்டு ஒரு செயற்கை அழகை உயிரோட்டமுள்ளதாக மாற்றிக் கொண்டிருக்கிறது என்பது புரிந்தது.

அந்த 'பார்க்காய்' ஜான் சல்லிவனுக்கு, 'இந்த ஒற்றைக் கல்லை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று சொன்னானாமே! அதையே அடிக்கல்லாக நாட்டி அவர் ஒரு பங்களாவை அமைத்தாராமே! அந்தப் பங்களாவே கலெக்டரின் வாசஸ்தலமாக மாறிற்றாமே!

இந்தச் சரவணன்...

சுமித்ராவின் நெடுநாளைய மனப் புழுக்கத்தை அகற்றும் ஒரு வாசஸ் தலத்துக்கு அடிப்படையாக அமைந்து விட்ட ஓர் ஒற்றைக் கல்லாய்த் திகழ்ந்தான்.

மூன்றாம் நாள்.

நீலாவிடமிருந்து கடிதம் வந்தது.

அன்புள்ள சுமித்ரா!

முன்பு ஒரு காலத்தில் 'அவனைப் பற்றிய கவலை இனி உனக்கு வேண்டாம். உரிமையோடு சொல்கிறேன். இனி அவன் எங்கள் பிள்ளை' என்று எழுதியிருந்தாய்.

நேரில் பார்த்தபோது அவன் உன் பிள்ளையாகவே மாறி விட்டிருந்ததைக் கண்டேன்.

அதற்காக அவனை நான் இழந்து விட்டதாகக் கருதவில்லை. தன்னை அவன் உன்னிடம் பூரணமாக ஒப்படைத்துக் கொண்டு விட்டான் என்றே நினைக்கிறேன். எங்களால் அதைத் தாங்கிக் கொள்ள முடியுமா என நீ கேட்கலாம். பிரிவை வேதனையாக நினைத்தால்தான் அந்தக் கேள்வியே வரும். இப்போது ஏற்பட்டிருப்பது பிரிவல்ல. ஓர் ஒற்றைக் கல் தனக்கும், உனக்கும் அனுகூலமாக இடம் பெயர்ந்திருக்கிறது; அவ்வளவுதான்!

---

"நான் டைரக்ட் பண்ண படம் எப்படி இருக்கு சார்?"

"Very Nice"

"உண்மையாக வா?"

"ஆமாம். அரைத்த மாவையே அரைத்தால் Nice ஆகத்தானே இருக்கும்?"

—செல்லபாண்டியன்



# ஹேண்ட்லூம் ஹவுஸ் ஆடை உடுத்தி கோல மயிலெனத் திகழுங்கள்!

ஹேண்ட்லூம் ஹவுஸ், தரமான துணிகளை மட்டுமே பல ரகங்களில் உங்களுக்காகத் தேர்ந்தெடுத்து அளிக்கிறது.

எனவே காஞ்சீபுரம், பனாரஸ், பெங்கால், போச்சம்பள்ளி, காத்வால், கோயம்புத்தூர் ஆகிய இடங்களின் மிகச் சிறந்த புடவைகளை உங்களுக்குக் கிடைக்கின்றன.

பிரத்யேகமான ரெடிமேட் ஆடைகள், படுக்கை விரிப்புகள், அலங்காரத் துணி வகைகள், குழந்தைகளுக்கான ஆடைகளும் கூட!

செப்டம்பர் 26 முதல் எல்லா வகைகளுக்கும்

**10%** தள்ளுபடி உண்டு.

## ஹேண்ட்லூம் ஹவுஸ்

9, ரத்தன் பஜார்
சென்னை 600 003

● ஞாயிறும் திறந்திருக்கும்



ADWAVE/HH/I 38

# அக்கினி சாட்சியாக...



பாமா கோபாலன்

"ஞானம் சொல்றதைக் கேளு. இப்படியே தோப்பிலே, வயற்காட்டிலே, ஐயனார் கோவிலிலே பேசிக்கிட்டிருந்தாப் போதுமா?'' என்று கேட்டபடி அவள் கழுத்து வளைவில் கையைப் படர விட்டான் செந்தில்.

''ச்சூ...'' — என்றபடி அவனது கையை விலக்கினாள். ''ம்....எல்லாம் கண்ணாலம் கட்டிய பிறகுதான்...'' அவள் சுழித்து, கண்களில் குறும்பு மின்னச் சொன்னாள்.

''தே... இதானே வேணாங்கறேன்....'' என்று கோபப்படுபவன் போல், முகத்தைத் திருப்பிக் கொண்டான் செந்தில்.

தளதளப்பும், பருவத்தின் எழில்களும் அவனை உன்மத்தனாக்கி யிருந்தன. சே! நெருங்க விட மாட்டேங்கறாளே...

''கோபமா...'' என்றபடி அவனது மோவாயைப் பிடித்துத் திருப்பினாள். சரே லெனத் திரும்பியவன், அவள் இடையில் கைவைத்துச் சேர்த்து அணைத்து, முகத்துக்காகக் குனிந்தான். உஷ்ண மூச்சு அவளது நாசியைத் தாக்கிற்று. அவள் திமிற, அவன் இன்னும் நெருக்கினான்.

''ச்சூ... விட்டுடு.. தாலி கட்டிக்கிட்ட பிறகு, கட்டிக்கலாம்'' என்று முனகினாள்.

''ஹூக்குங்.... எப்போ கல்யாணம் கட்டறது.... எப்போ....'' அவன் கெகிகெத்தான். ''உன் மாமனும் ஊரிலே இல்லே. ரெண்டு நாளாகும்னு சொல்றே....''

''அப்போ ஒண்ணு செய்வோம். அனுமார் கோயில் ஒண்ணு இருக்குதில்லே.''

''ஆமாம். ஸ்கூலுக்குப் பக்கத்திலே.''

''அங்கே போய்... ஒரு மஞ்சள் கயிற்றை என் கழுத்திலே கட்டிடு. அப்புறமா எல்லாம்'' என்று கண் சிமிட்டினாள்.

செந்திலுக்குச் சற்றுப் பயமாக இருந்தது. 'என்னடா இது வம்பு. தாலி கட்டச் சொல்றாளே. ஏதோ கிராமம் சுற்றிப் பார்க்க வந்த இடத்தில் பளிச்னு இருக்காளே, அனுபவிப்போம் என்று நினைத்தால்.... கல்யாணமாமே. சரி . ஒரு மஞ்சக் கயிறு. போகட்டும்... அவள் திருப்திக்கு... அப்பத்தான் திருப்தியா என்னோட ஆசைக்கு இணங்குவாள்...

''ம். வாங்க... கோயிலுக்குப்போகலாம்!'' அவளே அவன் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு போனாள்!

சின்னக் கோயில். சின்ன அனுமார் கை கூப்பிய நிலையில். ஓர் அகல்விளக்கு இருந்தது. எண்ணெயும், திரியும் இல்லை. காய்ந்த மாலைகளின் மிச்சங்கள் இருந்தன. ஒரு பூனை மியாவ் என்று கத்திக் கொண்டு ஓடியது.

ஞானத்துக்கு ஒரு மாதிரியாக இருந்தது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள்.

''என்ன புரோகிதர் வரலியா?'' என்று கிண்டலாகக் கேட்டான் செந்தில்.

''அனுமாரே போதும். இந்தாங்க மஞ்சள் கயிறு. நடுவிலே ஒரு மஞ்சளைக் கோத்துப் புட்டேன்.''

செந்தில் அவசரமாக வாங்கிக் கொண்டான். அவள் கழுத்தருகே கொண்டு போனான்.

''கொஞ்சம் இருங்க!'' புடவையின் முந்தானையில் முடிச்சுப் போட்டிருந்ததை அவிழ்த்தாள். சின்னப் பொட்டலம். பிரித்தாள். கற்பூரக் கட்டி.

எண்ணெயில்லா அகல் விளக்கின் நடுவில் வைத்தாள். இவனே தீப்பெட்டி கொடுத்தான். சிகரெட்டின் சிநேகிதனாயிற்றே!

''உள்ளே வாங்க.''

குனிந்தபடி நுழைந்தான். அகல் விளக்கில் கற்பூரம் எரிந்தது. அந்தக் கொழுந்தின் ஒளியில் அனுமார் ஜ்வலித்தார்.

''இந்த நெருப்பு சாட்சியா. இப்ப என் கழுத்திலே கயிரைக் கட்டுங்க. கயிறு தாலியாயிடும்'' அவள் கண்களில் நட்சத்திரம் பளிச்சிட்டது.

கற்பூர ஒளியும், அனுமாரும் செந்திலின் கண்களுக்குப் படவேயில்லை. அவள் முகம், கன்னங்கள், வரவேற்கும் உதடுகள், செழிப்பான கழுத்து, தோள்கள்....

அதே நினைப்பில் முடிச்சுக்களாகப் போட்டான்.

''கும்பிடுங்க.''

குனிய முடியாமல், கை கூப்பினான். அவள் வெளியே வந்தாள். அவன் தொடர்ந்தான்.

அவன் தொண்டையில் ஏதோ சிக்கியது. சமாளித்துக் கொண்டான்.

இப்போது அவளே அவன் மீது உரசியபடி நடந்தாள். சிரிப்பு. வெற்றிச் சிரிப்பு. தாலி ஏறியவுடன் தன்னையே முழுமையாகத் தரத்தயாரான சிரிப்பு.

செந்திலுக்கு அவளுடைய நெருக்கம் மகிழ்ச்சியைத் தராமல், முள்ளாய் நெருடியது. அடுத்த வாரம் சென்னையில் அவனுக்கும் அத்தை மகள் அன்னத்துக்கும் திருமணம் நடக்கப் போகிறது... இதோ. இந்த அழகுப் பெட்டகம் கடிபட்ட பழமாய், அருந்த

மலர்ச்சியாய் .... ரெண்டு நாட்களில் வாடப் போகிறது.

ஞானம், முழுத் திருப்தியுடன் கணவனை விட்ட செந்திலைப் பார்த்தாள் நாணத்துடன்.

அவன் யோசனையில் இருந்தான். நழுவ வேண்டிய வேளை.....

''ஞானம். நான் செவ்வாய் ராத்திரி பட்டணம் போயிட்டு, சனிக்கிழமை வந்துடறேன். ம்... பிறகு ஜாம் ஜாம்னு கிராமத்திலேயே செட்டில் ஆயிடலாம்....''

அவன் மடியில் சாய்ந்திருந்தவள் சொன்னாள்:

''சீக்கிரம் வந்துடுங்க. என் மாமனும் சனிக்கிழமை வந்துடும். நீங்க வேலை செய்யற மருந்துக்கம்பெனி பட்டணத்திலே எங்கேயிருக்கு?''

''சீ அதெல்லாம் எதுக்கு. நான் சரிட்டா வந்துடறேன்.''

செவ்வாய் இரவு வண்டியேறியவன்தான் செந்தில். வண்டியிலிருந்து கையை ஆட்டியவன், மனத்தில் 'இனிமேல் வர மாட்டேன், நீ வேண்டாம்' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

ஞானம், கண்களில் நீர் பனிக்க, உதடுகள் துடிக்க விடை கொடுத்தாள். பெயர்தான் ஞானம்...!

மாப்பிள்ளை ஊர்வலம் அமர்க்களமாய் நடந்து கொண்டிருந்தது. குழந்தைகள் சூழ அமர்ந்திருந்தான் செந்தில். பெட்ரோமாக்ஸ் தூக்கி வரும் பெண்ணொருத்தி – ஞானத்தின் சாயலில் இருந்தாள். இவனுக்கு வியர்த்தது.

'சே! அவள் நினைவு வந்து கொண்டே இருக்கிறதே...'

கார் போய்க் கொண்டிருந்தது. அத்தை மகள் அன்னத்தின் வடிவழகும், உதட்டுச் சிவப்பும் செந்திலைப் பைத்தியமாக்கிக் கொண்டிருந்தன.

கல்யாணப் பந்தலில் மணையில் அமர்ந்தான் செந்தில், மணக் கோலத்துடன்.

மந்திரங்களின் ஒலி, பேச்சொலிகளின் இடையே கேட்டுக் கொண்டிருந்தது. ஒரு தாம்பாளத்தில் புடைவை, தாலியுடன் புரோகிதர், சபையில் உள்ளவர்களின் ஆசீர்வாதத்துக்காக எழுந்து வந்தார்.

சடசடவென்று ஒலி. ஒரே பரபரப்பு. 'தீ....தீ...' என்ற குரல்கள். ஓடு ஓடு என்ற பதற்ற நிலை. வெயில் காலத்தில், காய்ந்திருந்த கல்யாணப் பந்தலில் தீ பற்றி, சீற்றத்துடன் பரவ....

கிராமத்தின் அனுமார் கோயிலில் அகல் விளக்குக்கு எண்ணெய் ஊற்ற வந்து கொண்டிருந்தாள் ஞானம், போனவன் சீக்கிரம் வர வேண்டுமே என்ற கவலையுடன்.

அருகில் இருந்த பள்ளிக்கூடத்திலிருந்து வெளியே வந்த ஆசிரியர் வேலுச்சாமி, பத்திரிகையை மடித்தபடியே, ''யாரு, ஞானமா வாம்மா.. கேட்டியா சேதியை..'' என்றபடி ஆரம்பித்தார்.

''பட்டணத்திலே, கல்யாணப் பந்தலிலே தீ பிடிச்சுட்டதாம்....''

''ஐயோ!.... எப்ப?''

''நேற்று காலையிலே. நல்ல வேளை முகூர்த்தம் நடக்கலே.... பெண் மாடியிலே இருந்திருக்கு.. மாப்பிள்ளைக்குத் தான் மோசமான தீக்காயமாம். ஆஸ்பத்திரிக்கு அழைச்சுட்டுப் போயிட்டாங்களாம்....''

''....ம். என்ன பாவமோ?''

''ஞானம்! பையன் போட்டோ...! அட! நம்ம ஊருக்கு வந்துட்டுப் போனாரே மருந்துக் கம்பெனி செந்திலு....''

ஞானத்திற்குத் தலைசுற்றியது.

''ஞானம்! கல்யாண வீட்டுக்கு அருகே குறவர்கள் கும்பல் இருந்ததாம். அவங்ககிட்டே இருந்த குரங்கு ஒண்ணு ஏடாகூடமா விளையாடி, பம்ப் பண்ணிய பெட்ரோமாக்ஸைச் சரிய வைச்சு... அதனால் தீ பரவியிருக்கும்னு நியூஸ் போட்டிருக்காங்க.''

ஞானம், தீர்க்கமாக அனுமாரைப் பார்த்தாள். அவளுக்குப் புரிந்தது. அகல் விளக்குக் கற்பூர அக்கினி சாட்சியாக...... அவள் கண்கள் பனிக்க, திரியைத் தூண்டினாள். அந்தக் கற்பூர நெருப்பு...!



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

**செ**ன்னையில் இளம் குற்றவாளிகளுக்கான சீர்திருத்தச் சிறைச்சாலையில் முதலில் காவலில் வைக்கப்பட்டார் ஸி. ஆர். முன் அனுபவமுள்ள அவர், சிறை அதிகாரிகள் முன்னை விடக் கடுமையாக நடந்து கொள்கிறார்கள் என்பதைக் கவனித்தார். உடல் நலக் குறைவு ஏற்பட்டபோது சரியானபடி அவருக்குச் சிகிச்சை தரப்படவில்லை. ஆயின் சீக்கிரமே அவர் வேலூருக்கு மாற்றப்பட்டார். இது அவரது மூன்றாவது வேலூர் சிறைவாசம்.

இங்கு ஸி. ஆர். ஓரளவு நன்றாகவே நடத்தப்பட்டார். சக கைதிகளுக்கு ஆழ்வார் பாசுரங்களை விரித்துரைத்தார். தாமஸ் ஹார்டி, அப்டன் சின்க்ளேர் ஆகியோரது நூல்களையும் தாமஸ் கெம்பிஸ் எழுதிய Imitation of Christ என்ற நூலையும் படித்தார். கடைசியாகக் குறிப்பிட்ட புத்தகம் உண்மையிலேயே மிக அழகானது என்று கண்டார்.

சின்க்ளேரின் Wet Parade என்ற நூல் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அமெரிக்க அரசியலில் உள்ள லஞ்ச ஊழல்கள் அதிலே அச்சுறுத்தும் விதமாகக் கண்டனத்துக்குள்ளாகி யிருந்தன. ஆயினும் இதை விடவும் ஹார்டியின் எழுத்தே மேலானதாக அவர் கருதினார். "இரண்டுக்கும் இடையே உள்ள வேற்றுமைகள் மிக அதிகம்" என்று அவர் தேவதாஸுக்கு எழுதினார். "பிரசார பாணி இலக்கியத்திலிருந்து உண்மையான கலைத் திறனுடன் கூடிய நளின நடை எவ்வளவு மாறுபடுகிறது!"

கைதிகள் இலக்கியச் சர்ச்சைகளில் ஈடுபட அரசு அனுமதித்தது. மீண்டும் எரவாடா சிறையில் வைக்கப்பட்டிருந்த மகாத்மா தேவதாஸ் மூலமாக, கலை, பிரசாரம் ஆகியவை குறித்து ஸி. ஆர். வெளியிட்ட கருத்து பற்றி அறிந்ததும் அதிலிருந்து மாறுபட்டு எழுதினார்: "Uncle Tom's Cabin தெள்ளத் தெளிவான எளிய பிரசார இலக்கியம்தான். ஆனால் வேறு யாரேனும் பின்பற்ற முடியாத கலைச் சிறப்பும் உடையது." இதற்குப் பல்லாண்டுகளுக்குப் பிறகு — பல புத்தகங்களை எழுதி முடித்ததற்கப்புறம் — ஸி. ஆர். தம்மைத் தாமே ஒரு பிரசார எழுத்தாளன் என்றுதான் வர்ணித்துக் கொண்டார்.

ஸி. ஆரைச் சுற்றி யிருந்த கைதிகள் ஹிந்தி கற்பதில் நன்கு முன்னேறி வந்தார்கள். சிலர் இதற்கு மேல் உருதுவும் பயின்றார்கள். கேரளத்திலிருந்து வந்திருந்த அரசியல் கைதி நாராயண மேனனின் உதவியுடன் ஸி. ஆர். சம்ஸ்கிருதம் பயின்றார். தேவதாஸுக்கு அவர் எழுதினார்:

"தேவ பாஷையான சம்ஸ்கிருதத்தின் மிக அழகானதான இலக்கணம் என்னைப் போன்ற சாமானிய மனிதர்களின் அனுபவத்துக்கு அப்பாற்பட்டதாக உள்ளது! இருப்பினும் ஹிதோபதேசம் முதல் பாகத்தை முடித்து விட்டேன். நான்காம் பாகத்தில் ஆரம்பித்து, பஞ்சதந்திரம் படித்து வருகிறேன். கீதையின் சில அத்தியாயங்களை நானாகவே படித்துப் புரிந்து கொண்டுமிருக்கிறேன்."

ஸி. ஆரின் முயற்சி பற்றிக் கேள்விப்பட்டதன் காரணமாக எரவாடாவில் தமது சிறைத் தோழரான வல்லபபாயும் சம்ஸ்கிருதத்தைப் படித்துச் சமாளிக்க ஊக்குவிக்கப்பட்டிருக்கிறார் என்பதை மகாத்மா வெளியிட்டார். தமது சகா ஒருவருக்கு எழுதும்போது, "வல்லபபாய் இப்போதெல்



லாம் சம்ஸ்கிருதப் படிப்பிலேயே ஆழ்ந்து போயிருக்கிறார்" என்று குறிப்பிட்டார்.

எரவாடாவிலிருந்து காந்தி, நரசிம்மனுக்கும் அவரது உடல் நலம் பற்றி விசாரித்து எழுதினார். தனித் தனியாக ஒவ்வொருவரையும் பற்றி மகாத்மா கவலைப்படுகிறார் என்பதற்கு இவ்வாறு கிடைத்த சான்று, ஸி. ஆரின் மனத்தைக் கவர்ந்து வியப்பில் ஆழ்த்தியது. மகாத்மாவை "ஓர் அற்புத மனிதர், நம் அனைவரிலும் மிகப் பெரிய குடும்பத் தலைவர்" என்றெல்லாம் ஸி. ஆர். வர்ணித்தார்.

ஸி. ஆர். வேலூரில் சிறை வாசமிருந்த கால கட்டத்தில் கைதிகளைப் பேட்டி காண வருவதற்கு உள்ள சட்ட திட்டங்கள் கடுமையாக்கப்பட்டன. கைதிக்கும் அவரைக் காண வருபவருக்கும் இடையில் ஒரு கனமான திரை வைக்கப்பட்டது. கைதிகள் சார்பில் ஸி. ஆர். ஆட்சேபணை எழுப்பினார். ஆனால் அதனை லட்சியம் செய்வாரில்லை. கைதிகள் இதற்குப் பதிலடி தருவது போல்

பேட்டிக்கேயே இனி துறந்துவிடுவது எனத் தீர்மானித்தனர்.

வி. ஆர். விடுதலை பெற வேண்டிய தினத்துக்குப் பதினொரு நாள் முன்பு, ஜூன் 28ம் தேதி பெரும் துயரமும் வேதனையும் தரும் செய்தி கிட்டியது. நாமகிரியின் கணவர் வரதாச்சாரி திடீரென்று திருச்சியில் காலமாகி விட்டிருந்தார். பார்க்கப் போனால் நாமகிரிதான் (பாப்பா) உடல் நலமின்றி இருந்து வந்தார். சில மாதங்களுக்கு முன்பு கூட அவர் மெலிந்து கரைந்து உருகிக்கொண்டிருப்பதாகவே வி. ஆருக்குத் தோன்றியது. ஆனால் இப்போதோ அவளைக் கவனித்துக் கொள்ள ரங்கூனிலிருந்து வந்த வரதாச்சாரியை டைபாய்டும் நிமோனியாவும் காவு கொண்டு விட்டன.

''பாப்பாதான் அவருடைய செல்வப் பெண்'' என்று மகாத்மா சரியாகக் கணித்துச் சொன்னார். அவள் விதவையானது வி. ஆரை ஆழமாகப் பாதித்தது. ஆனால் ஜாமீனில் விடுதலை பெறுவதென்பது அவருடைய தார்மீகச் சட்டப் புத்தகத்தில் இடம் பெறவில்லை.

மகாத்மா வி. ஆருக்குத் தந்தி அனுப்பினார்: ''எங்களுடைய ஆறுதல் உங்களுக்குத் தேவைப்படாது. அசைக்க முடியாத நம்பிக்கையுடன் கடவுளை நீங்கள் பற்றியிருப்பீர்கள்.'' நாமகிரிக்கும் காந்தி தந்தி அனுப்பினார்: ''மகா தைரியசாலியான ஒரு தகப்பனாரின் பெண் நீ என்பதை மறவாதே.''

வி. ஆர். ஜூலை 9ந் தேதி விடுவிக்கப்பட்டார். ஆகஸ்டு தொடக்கத்தில் அவர் சென்னை மாகாண கவர்னர் ஸர் ஜியார்ஜ் ஸ்டான்லேயுடன் ஐம்பது நிமிடம் பேசினார். பரஸ்பரம் ஒருவரது கண்ணோட்டத்தை மற்றவர் புரிந்து கொள்வதற்காக நிகழ்ந்தது இந்தச் சந்திப்பு. அரசியல் நிலைமை இழுத்துப் பறித்துக் கொண்டு நின்றது. காங்கிரஸ் எதிர்ப்புத் தெரிவித்த போதிலும் ஓர் அங்குலம் கூட முன்னேறவில்லை. அரசின் போக்கும் மாறவில்லை.

வி. ஆர். இந்நிலையில் மாற்றம் காண ஒரு வழி கண்டுபிடிக்கத் தயாராயிருந்தார். ஆனால் நம்பிக்கைகள் தகர்ந்து போயிருந்தன. ''கௌரவமான, பயன் தரத்தக்க பேச்சு வார்த்தைகள் நடக்கலாம் என்ற நம்பிக்கைகள் 1932 ஜனவரியில் தான் தூளாகி விட்டன'' என்று வி. ஆர். ஆகஸ்டு இறுதியில் கூறினார். இந்த எட்டு மாத கால வேதனைகளைக் குறிப்பிட்டுப் பேசினார்.

அவர் மேலும் சொன்னார்: ''போராட்டம் நடத்த வேண்டும் என்ற நிர்ப்பந்தத்தைக் காங்கிரஸுக்கு அரசாங்கம் ஏற்படுத்தியது என்பது அனைவருக்கும் நன்கு தெரியும். இதையொட்டி அனுபவிக்கப்பட்ட துன்பங்கள் உண்மையானவை. இப்போது வருத்தம் தெரிவித்து விடுவதால் மட்டும் போராட்டத்தை நிறுத்திவிட முடியாது.''

ஆகஸ்டு 22ந் தேதி டாக்டர் ஸைஃபுட்டின் கிச்லு கைதானதை யொட்டி வி. ஆர். காங்கிரஸின் தற்காலிகத் தலைவரானார். இது ஜனவரியில் பட்டேல் கைதாகு முன் அவர் விட்டுச்சென்ற கட்டளைகளின்படி நடந்தேறிய ஒன்று.

குஜராத்துக்கு விஜயம் செய்த வி. ஆர். சிறைப்படாமல் வெளியே இருந்த ஆசிரமவாசிகளைச் சந்தித்து உற்சாகப்படுத்தினார். பிரிட்டனிலிருந்து வந்த இந்தியா லீக் பிரதிநிதிகளை வரவேற்றார். அக்குழு இந்தியர் பால் அனுதாபம் கொண்டு துடித்துக் கொண்டிருப்பதைத் தாம் காண்பதாகக் கூறினார். மேலும் 'அவசரச் சட்டங்களால் நடத்தப்படும் ஆட்சி நீடித்தாலும் காங்கிரஸை நொறுக்கி விட முடியாது' என்று வைஸ்ராய் ஒப்புக் கொண்டிருப்பதாக அவருடைய சொற்பொழிவு ஒன்றைப் படித்துவிட்டு வியாக்கியானம் செய்தார்.

காங்கிரஸ்காரர்கள் நசுக்கப்படவில்லைதான். ஆனால் இந்த இழுபறி நிலையானது அவர்களுடைய உற்சாகத்தைப் பாதித்துவிட்டிருந்தது. புதிதாக ஓர் ஊக்கமளிக்கும் விஷயம் அவர்களுக்குத் தேவைப்பட்டது. அதனைச் சிறைச்சாலையின் சுவர்களுக்குள்ளிருந்தபடியே மகாத்மா அவர்களுக்கு அளித்தார்.

தாழ்த்தப்பட்டோருக்குத் தனித் தொகுதிகள் வழங்க லண்டன் யோசித்துக் கொண்டிருப்பதாகச் சிறைப்பட்டு இரு மாதங்களுக்குப் பிறகு காந்திக்குத் தெரிய வந்தது. அயல் நாட்டுக் காரியதரிசி ஸர் ஸாமுவேல் ஹோருக்கு அவர் கடிதம் எழுதினார். வட்ட மேஜை மகாநாட்டின்போதே தாம் கோடி காட்டியது போல் இத்திட்டம் அமலாக்கப்பட்டால் தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்க நேரிடும் என்று தெரிவித்தார்.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

---

பையன்: அப்பா, வரும் தேர்தலில் எனக்கு ஓட்டு உண்டா?

தந்தை: உனக்கு ஓட்டுப்போட வேண்டிய வயதுக்கு பதினைந்து நாட்கள் குறைவாக இருக்கே?

பையன்: அப்ப இந்த தேர்தலுக்கு ஓட்டு போடமுடியாது. பதினைந்து நாட்கள் கழித்து வரும் தேர்தலுக்கு போடலாம் என்று சொல்லுங்க!

—பொன். தண்டபாணி



ஆம்! எனது குடும்பத்தினருக்குத் தெரியும். என் சம்பளத்தின் மறுபாதி மறைந்த மாயம். அது எங்களது எதிர்கால சேமிப்பாக கரூர் வைஸ்யா பாங்கின் பல்வேறு சேமிப்புத் திட்டங்களில் வளர்ந்து வருகிறது.

என்று நான் கரூர் வைஸ்யா பாங்கில் சேமிக்கும் முடிவை மேற்கொண்டேனோ அந்நாளே என் வாழ்வில் ஒரு பொன்னாள்.

எனது குடும்பத்தினரின் எதிர்கால வளமையை உறுதிப்படுத்திய இந்த நல்ல முடிவே எனக்குக் கிடைக்கும் இன்முக வரவேற்புக்கு அடிப்படை.

இன்றே கரூர் வைஸ்யா பாங்கின் கிளை ஒன்றிற்கு வருகை தாருங்கள். எளிய சேமிப்புத் திட்டங்கள் உங்கள் எதிர் காலத்திற்கு ஒளியூட்டும். அத்துடன் உங்கள் இல்லத்தாரின் இன்முக வரவேற்பு என்றும் உங்களுக்குக் கிடைக்கும்.



**கரூர் வைஸ்யா**
**பாங்க் லிமிடெட்**

பதிவகம், கரூர்-639 001.

**கே.வி. ராகவாச்சாரி**
சேர்மன்

# நான் இல்லத்திற்கு எடுத்துச் செல்வது என் சம்பளத்தில் ஒரு பாதி தான். இருப்பினும் எனக்கு அங்கு இன்முக வரவேற்பு காத்திருக்கிறது.



**அண்டமும் அகிலமும் அருள்அர சாட்சியைக்**
**கொண்டன ஓங்கின குறைஎலாம் தீர்ந்தன**
**பண்டங்கள் பலித்தன பரிந்துஎனது உள்ளத்தில்**
**எண்டகும் அருட்பெருஞ் சோதியார் எய்தவே!**

- திருஅருட்பா

# ஒரு நாள்; ஒரு சவால்!

## ‘‘அழகுதான்! காப்பியைத் தியாகம் செய்வதா?’’

முதிர்ந்த வயதிலும் வீட்டு வேலைகளைச் சலிக்காமல் கவனிக்கும் திருமதி மீனுட்சிக்குக் காப்பி என்றால் உயிர். உலகில் எந்தப் பொருளை இழந்தாலும் கவலைப்படாதவருக்குக் காப்பியை மட்டும் தியாகம் செய்ய முடியாது. சவாலைப் பற்றிச் சொன்னவுடன் அந்த விழிகளில்தான் எத்தனை பாவம்! மனம் சோர்ந்தாலும் இந்த வயதிலும் சவாலை ஏற்கும் ரோஷம் விடவில்லை.

சில நிமிடங்களில் பரபரப்பான அவர் கைகள் இயங்க மறுத்தன. பறக்கும் கால்களும் ஓட மறுத்தன. மடக் மடக் கென்று வெது வெதுப்பாகத் தண்ணீர் உள்ளே போகிறது.

மகள் திருமதி விசாலாட்சிக்கு ‘ரசத்தில் எவ்வளவு பருப்புப் போட வேண்டும் என்று திடீர் சந்தேகம் எழும்ப, தாயார் ‘ஏதோ போடு’ என்று அசுவாரஸ்யமாய்ப் பதில் சொல்கிறார். ஆச்சரியத்துடன் மகள் உள்ளே போகிறாள்.

ஐந்து வயதுப் பேத்தி மீனு, ‘‘பாட்டி! பாட்டி! கதை சொல்லு’’ என்று கேட்டுக் கொண்டே மெல்ல வருகிறாள். காப்பியை மறக்கக் கதை சொல்ல ஆரம்பிக்கிறார் பாட்டி.

எப்படியோ நேரம் ஓடுகிறது.

மணி இரண்டு. மகள் விசாலாட்சி மணக்க மணக்கக் காப்பியுடன் வருகிறாள். வழக்கம் போலக் காப்பியுடன் தாய் அருகில் வந்து விட்டு ஏதோ தவறு செய்து விட்டது போல் குற்ற உணர்வுடன் காப்பியுடன் திரும்பச் செல்கிறாள். பின்பு தன் தந்தையிடம் காப்பியைக் கொடுக்கிறாள். ‘‘ஆகா! காப்பி ரொம்ப அருமையா இருக்கே! பீபரி கொட்டையின் மணமே தனி தான். அதிசயம், இன்னிக்கு மாதவரம் பால் கள்ளிச் சொட்டாய், அருமையா இருக்கு’’ அவர் அடுக்கிக் கொண்டே போக, மீனுட்சி பெருமூச்சு விடுகிறார். புடவைத் தலைப்பால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொள்கிறார். குளிர்ந்த மோர் அருந்துகிறார். காப்பி குடிக்கும் நேரத்தில் இதைப் பருகியது அவருக்குப் பிடிக்கவே இல்லை. கசப்பு மருந்தைக் குடித்த உணர்ச்சி முகத்தில் பரவுகிறது.

இதன் நடுவில் பேரன்கள் பாலாஜி ராம்ஜி பலபம் நோட்டுக்காகச் சண்டை போட ஆரம்பித்தார்கள். அவர்கள் மனத்தை மாற்ற மறுபடியும் கதை பிறக்கிறது.

பாட்டி நீதிக் கதை கூறி முடித்ததும் இருவரும் ‘‘அது சரி பாட்டி! தினம் பால்தான் குடிக்கிறோமே! இன்னிக்கு ஒரு நாள் காப்பி தாயேன்!’’ என்கிறார்கள். பாட்டியால் அதற்கு மேலும் தாக்குப்பிடிக்க முடியவில்லை.

‘‘குழந்தைகளுக்குக் காப்பி கலந்து கொடுடி’’ என்று மகளிடம் உத்தரவு போட்டவர் அப்படியே ‘‘எனக்கும் கொஞ்சம் ஸ்ட்ராங்கா போட்டுக் கொண்டா’’ என்கிறார். என்னைத் திரும்பிப் பார்க்கவே யில்லை. ஆனால் உற்சாகம் திரும்பி விட்டது அவருக்கு.

அனுபவம்: **சிக்கி**





# செம்பூர் முருகன்

நீலகண்டன்

**ப**ம்பாயில் உள்ள திருச்செம்பூர் செடா நகரில் முருகப் பெருமானுக்காக ஒரு பெரிய கோவில் உருவாகி வருகிறது. இப்பணியை சுப்பிரமணிய சமாஜம் என்ற பக்தர் குழு சிர மேற்கொண்டு முடிக்கும் தறுவாயிலுள்ளனர்.

சுப்ரமண்ய சமாஜம் கடந்த முப்பது ஆண்டுகளாக பம்பாயில் செயல்பட்டு வருகிறது. பம்பாய் நகரில் தமிழர்களின் குடியிருப்பான மாதுங்காவில் நான்கைந்து பக்தர்களால் உருவாக்கப்பட்டது. தைப்பூசம், கந்த சஷ்டி போன்ற விசேஷ தினங்களில் ஒரு குறிப்பிட்ட பக்தரின் வீட்டில் வைத்து பூஜை, பஜனை போன்ற நிகழ்ச்சிகளை நடத்தி வந்தனர். சிறுகச் சிறுக இந்த ஸமாஜம் வளர்ந்து வந்தது. முருகப் பெருமானுக்கு ஒரு கோவில் எழுப்ப வேண்டும் என்ற முக்கிய குறிக்கோளுடன் செயல்பட்டு வந்தது. அதற்கு ஒரு தகுந்த இடத்தைப் பெற முயன்றும் வந்தது.

1969ம் ஆண்டு செம்பூரில் இந்த இடத்தை சமாஜம் ரூ. 1,30,000 கொடுத்து விலைக்கு வாங்கியது. அப்பொழுது அந்த இடம் ஓர் உப்பங்கழிக் காடாக (சதுப்பு நிலமாக) இருந்தது. இடத்தைத் தேர்ந்தெடுத்த பிற்பாடு கோவிலை எப்படி எழுப்பப்



பெரிய கோவிலுக்கு முன்னோடியாக ஒரு பாலாலயம் நிர்மாணிக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்த சமாஜம்; கட்டப்படும் பெரிய கோவில் அருகிலேயே ஒரு பாலாலயத்தை உருவாக்கியது. கடந்த ஏழு ஆண்டுகளாக இந்தச் சிறிய பாலாலயத்தில் குடியிருந்து கொண்டு முருகப் பெருமான் பம்பாயில் உள்ள பக்தர்களுக்கு அருள் செய்து வருகிறார். ஒவ்வோர் ஆண்டும் கந்த ஷஷ்டி, தைப்பூசம் போன்ற விசேஷ தினங்களில் விசேஷ பூஜைகளும், லட்சார்ச்சனைகளும், காவடி எடுத்த◆ போன்ற விழாக்களும் நடைபெற்று வருகின்றன. சாதாரண தினங்களில் நான்கு கால பூஜைகள் முறைப்படி நடத்தப்பட்டு வருகின்றன. ஸமாஜத் தலைவர் திரு ராமஸ்வாமி, செயலாளர் திரு சுப்ரமண்யம் ஆகியோர் கோவில் எப்படி அமையப் போகிறது என எமக்கு விளக்கினார்கள். குன்றிலிருப்பான் குமரன். எனவே கோவிலை மலை மேல் அமைக்க வேண்டும் என்பதே ஸமாஜத்தின் எண்ணம். அதற்கான மலை செம்பூரில் இல்லை. குன்று இருந்தாலும் இட வசதி சரியாக அமையவில்லை. படியேறித்தான் முருகனைத் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணத்தை நிறைவேற்றிக்

போகிறோமோ என்ற இரண்டாவது கவலை பக்தர்களை ஆட்கொண்டது. நம்பிக்கையுடன் தீவிரமாகச் செயல்படத் தொடங்கினர். நாற்பது லட்சம் ரூபாய் செலவழியும் என்று கணக்கிடப்பட்டது. விலைவாசி உயர்வு காரணமாக இந்தக் கணக்கு ஐம்பது லட்சமாகிவிடும் என்று எதிர்பார்த்த ஸமாஜம் அதற்காக நிதியைத் திரட்டத் தொடங்கியது. வீட்டுக்கு ஓர் உண்டியல் பெட்டி வீதம் 25000துக்கும் மேலான உண்டியல் பெட்டிகளை பம்பாயிலும் மற்றும் பல ஊர்களிலும் உள்ள முருக பக்தர்களுக்கு வழங்கி அவர்கள் முடிந்ததை அவ்வப்போது அந்த உண்டியலிலிட்டு நிரப்பி ஸமாஜத்துக்குத் திருப்பிக் கொடுக்கவேண்டும் என்று உளங்கனிந்த வேண்டுகோள் விடுத்தது. இந்தப் புதிய முயற்சி வெற்றியடைந்தது. மகாலட்சுமி கடைக் கண் திறந்து பார்த்து விட்டாள். கோவில் உருவாகத் தொடங்கியது. மேலும் திருப்பணி நிதிக்காக நாட்டிய நாடக விழாக்களை நடத்தியது. இன்னும் நடத்திக் கொண்டு வருகிறது. தென்னிந்தியக் கலைஞர்கள் மட்டுமின்றி வட நாட்டுக் கலைஞர்கள் பலரும் உதவி நிகழ்ச்சிகள் நடத்தியுள்ளனர்.

கொள்ள இந்தக் கோவிலை ஐம்பத்தோரு அடி உயரம் உள்ள ஒரு கட்டிடத்தின் மேல் மாடியில் அமைப்பது என்று முடிவாகியது.

கோவில் உருவாக்குவதிலேயே ஒரு புதிய சரித்திரத்தைப் படைத்திருக்கிறார்கள். ஆகம முறைப்படி கருங்கல்லால் கட்டப்படும் இந்தக் கோவில் விஞ்ஞான முறைப்படி கான்கிரீட்டால் கட்டப்படும் ஒரு பெரிய கட்டிடத்தின் மேல் அமையப் போகிறது. 108 படிகள் ஏறியே முருகனைத் தரிசிக்கும்படியாக அமைக்கப் படுகிறது. மூலாலயத்தின் ராஜ கோபுரம் 26 அடி உயரம் உள்ளது. சித்திர வேலைப்பாடுடன் உள்ள இந்தக் கோபுரம் தமிழ் நாட்டிலுள்ள கோவில்களில் காணப்படும் ராஜ கோபுரத்தை நினைவு படுத்தும். இந்த ராஜகோபுரம் வாலாஜாபாத்திலிருந்து கொண்டுவரப்பட்ட விசேஷமான கருநீலமுடைய கருங்கல்லினால் உருவாக்கப்பட்டது. தமிழ் நாட்டின் சிறந்த சிற்பிகள் அமைத்து வருகிறார்கள். ராஷ்டிரபதி விருது பெற்ற குமரேச ஸ்தபதி தலைமையில் சிற்பிகள் இரவு பகல் பாராமல் பணி செய்து வருகின்றனர்.

மூலவரான முருகனைத் தவிர விநாயகர், தர்மலாஸ்தா, குருவாயூரப்பன், துர்க்கை ஆகிய தெய்வங்களுக்கும் கோவில்கள் அமையப் போகின்றன. கர்ப்பக்கிருகத்தைச் சுற்றியுள்ள நான்கு • மூலைகளிலும் மேற்கூறிய தெய்வங்களின் கருவறைகள் அமையவிருக்கின்றன.

இந்தக் கோவில் மேல் மாடியில் அமைக்கப்படுவதால் தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்வதற்காக ஒரு புதிய அமைப்பை உருவாக்கியிருக்கிறார்கள். தெய்வங்களை (மூலஸ்தான விக்கிரகங்களை) மண்ணில்தான் பிரதிஷ்டை செய்வது நம்முடைய பரம்பரை வழக்கம். இந்த வழக்கத்தை விடாமல் இருக்கக் கட்டிடத்தின் அஸ்திவாரம் முதல் மேல் மாடி வரையிலும் குழாய் வடிவில் ஐந்து கான்கிரீட் தூண்களை நிர்மாணித்துள்ளனர். அதில் மண்ணை நிரப்பி (மேல் மாடி வரையிலும்) அந்த மண்ணிலேயே தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்யப் போகின்றனர்.



⌘ பாலாலயம்

மூலவரான முருகப் பெருமானின் உருவச் சிலை நாலரை அடி உயரமுள்ளது. தமிழ் நாட்டில் மயிலம் என்ற இடத்திலுள்ள விசேஷமான கருங்கல்லினால் செய்யப் பட்டது. மற்றத் தெய்வங்களின் உருவச் சிலைகளும் அவ்வாறே செய்யப்பட்டன.

உற்சவ மூர்த்திகளின் உருவச் சிலைகள் பஞ்ச லோகத்தினால் செய்யப்பட்டவை. சுவாமி மலையில் உருவாக்கப்பட்டு வருகின்றன. இப்பொழுது பாலாலயத்தில் குடியிருக்கும் முருகப் பெருமானின் சக்தியை அப்படியே புதிய கோவிலில் பிரதிஷ்டையாகப் போகிற புதிய மூலவரின் மேல் ஆவாஹனம் செய்யப் போகிறார்கள். இந்தப் பெரிய கோவில் முடியும் தறுவாயில் உள்ளது. கும்பாபிஷேகம் விரைவில் காஞ்சிப் பெரியவாளால் செய்யப்படவிருக்கிறது.

முருகன் ஆலயம் கோவிலாக மட்டுமின்றி எல்லா வகையிலும் பக்தர்களுக்குப் பயனளிக்கும் ஓர் உன்னத கற்பக விருட்சமாக இருக்கப் போகிறது. கல்யாணம் மற்றும் கலை நிகழ்ச்சிகள் நடத்துவதற்காக எல்லா வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய மண்டபம் உருவாகியுள்ளது. வேதம், உபநிஷத்து, திருக்குறள் போன்ற பழம்பெரும் நூல்கள் பம்பாய் மக்களுக்குப் பயிற்றுவிப்பதற்காக ஒரு வேத பாடசாலையும் உருவாகி வருகிறது. ஓர் ஆராய்ச்சிக் கல்லூரியும் அதற்கு உதவியாக ஒரு பெரும் புத்தகசாலையும் உருவாகப் போகிறது. நவீன வசதிகளுடன் ஒரு வைத்தியசாலையும், பழம் பெருமை வாய்ந்த ஆயுர்வேத வைத்தியசாலையும் அமைக்கவிருக்கிறார்கள்.

இவ்வாறு இறை உணர்வை வளர்க்கும் போதே பலவித சமுதாயப் பணிகளும் ஆற்றும் கோவில் இப்படியொரு அமைப்பு இந்தியாவிலேயே இதுதான் முதலாவதாக இருக்கும்.





⌘ ராஜ கோபுரமும் குருவாயூரப்பனின் கர்ப்பக்கிரகமும்

⌘ மூலவரின் (முருகனின் கர்ப்பக்கிரகம்



படவிமரிசனம்

# ஆறிலிருந்து அறுபதுவரை...

கட்டுப்படுத்த முடியாத காட்டாற்று வெள்ளம், திமிறிக்கொண்டு கொட்டும் நீர் வீழ்ச்சி இவைகளைக் கட்டுப்படுத்தித் தேக்கிப் பயனுள்ள மின்விசை உற்பத்தி செய்கிறார்களே அந்தச் சாதனையைப் புரிந்திருக்கிறார் இயக்குநர் எஸ்பி. முத்துராமன். புதிய ரஜனியை இந்தப் படத்தில் அவர் நமக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார். ரஜனி என்றதும் நமக்கு அவருடைய சில மானரிஸங்கள்தான் கண்முன் தோன்றும். ஆனால் இந்தப் படத்தின் மூலம் குணச்சித்திரப் பாத்திரங்களிலும் தம்மால் சோபிக்க முடியும் என்பதை வெளிப்படுத்துகிறார் ரஜனி. வேதனை, கோபம் வெறுப்பு, சோகம், ஏமாற்றம், ஆத்திரம், ஆற்றாமை ஆகிய பாவங்களைத் தலைசிறந்த நடிகர்கள் இந்நாள்வரை வெளிப்படுத்துவதற்குக் கையாண்ட முறையிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகப் புதிய கோணத்தில் அவற்றை வெளிப்படுத்திப் பார்ப்போரின் நெஞ்சங்களை நெகிழச் செய்கிறார் இந்தப் படத்தில் ரஜனி. ஆர்ப்பாட்டமோ கூச்சலோ இல்லை— அதற்கான சந்தர்ப்பங்கள் இருந்தும் அப்படிச் செயல்படாமல் அமைதியாக, இயல்பாக, யதார்த்தமாக சராசரி மனிதன் தன் உணர்ச்சிகளை எப்படி வெளியிடுவானோ அப்படி வெளியிட்டு நடித்திருப்பதற்கு ரஜனியையும் அப்படி நடிக்கச் செய்திருப்பதற்கு இயக்குனர் எஸ்பி. முத்துராமனையும் மனம் விட்டுப் பாராட்டுகிறோம்.

வழக்கமான சினிமா மசாலாக்களைக் கலக்காமல் கதையை வாழ்க்கையை யொட்டிச் சொல்லிக் கொண்டு போவதற்காகவும் உள்ளத்தைத் தொடும்வகையில் பல இடங்களிலும் வசனங்கள் பளிரிடுவதற்காகவும் நல்ல பாடல்களுக்காகவும் இம்மூன்று பொறுப்புக்களையும் ஏற்று முடித்திருக்கும் திரு பஞ்சு அருணாசலத்துக்கு மூன்று சபாஷ்களைத் தருகிறோம்.

கதை பழங்கால மோஸ்தர். ரொம்பச் சோதனை, வேதனை. அடுக்கடுக்காக வரும் துன்பங்கள். அத்தனையையும் அனுபவித்துப் படம் பார்ப்போரின் கண்ணீரைக் கொட்ட வைத்து முடிவில் மகிழ்ச்சியாக நிறைவு பெறும் கதை. தம் தம்பி தங்கைகளுக்காகத் தம் வாழ்க்கையைத் தியாகம் செய்து அவர்கள் உயரப் பாடுபடுகிறான் அண்ணன். நன்றி இல்லாத உடன்பிறப்புக்களின் உதாசீனம். உணர்ச்சி மிக்க கட்டங்கள் பல. தங்கையின் கல்யாணச் செலவுக்காக—ரூபாய் ஐயாயிரத்துக்காக சந்தானம் (ரஜனி) முன் பின் பார்த்திராத ஒரு பெண்ணைத் தானே மணக்க முடிவெடுப்பது ரசமான கட்டம். படாபட் — லட்சுமியாகச் சிறப்பாக நடித்திருக்கிறார். எழுத்தாள நண்பனாக வரும் 'சோ'வின் பாத்திரமும் நடிப்பும் சோபிக்கின்றன. குணச்சித்திர நடிகரான டி. கே. பகவதி சில காட்சிகளிலே வந்தாலும் நிறைவைத் தருகிறார். புது முகங்களும் சோடை இல்லை. சோகம் படத்தில் ஓவர் டோஸாகத் தெரிகிறது. ஆனால் பெண்களுக்குப் பிடித்தமான படமாக இருக்கும்.

ஆறிலிருந்து அறுபதுவரை நம்மை நாற்பதுக்கு: (1940) கொண்டுபோகும் (கதையம்சத்தில் மட்டும்!) ஒரு நல்ல படம்.

**கௌசிகன்**

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# மிகப் பொருத்தமான ஜோடி

## இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும் சோப் மற்றும் டால்க்

துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு
இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும்
பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா!
புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில்
நீங்கள் இருப்பீர்கள்!







**கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்**

Interpub/CTS/1/79 TM

